ஓம் பரப்பிரம்மணே நம :

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி உற்சாகத்தைத் தரவல்லதான
விகடமும், அநுபவ விநோத நீதிகளும் நிறைந்த
உயரிய செந்தமிழ் மாதப் பத்திரிகை.

ஒவ்வொரு மாத ஸஞ்சிகையும் 64-பக்கங்களுள்ளது.

***AMIRTHA GUNABODHINI***

*(The Largest Circulated High Class Tamil Monthly.)*

பத்திராசிரியர்:—திரிசிரபுரம்-எஸ்.ஜி. இராமாநுஜலுநாயுடு
பிரபல கிரந்த கர்த்தா. பிரசித்த அனுபவ ஞான சாஸ்திரி.

வருஷ சந்தா நுபாய் ஒன்றே. வெளி நாடு நுபாய் 2.

## ஏழாவது கமலம்

## Vol. 7.

**April 1932—March 1933.**

**ஆங்கீரஸ வருஷ வால்யம்**

சித்திரைமீ முதல் பங்குனிமீ வரையில்.

[776-பக்கங்கள் கொண்டது.]

**"All our Knowledge is based upon Experience"—Vivekananda.**

" நம்முடைய ஸகல அறிவும் அநுபவத்தையே சார்ந்து நிற்கிறது. "

**இ. மா. கோபாலகிருஷ்ண கோன்,**

" அமிர்த குணபோதினி " ஆபீஸ், 158-A, பிராட்வே, சென்னை.

 [காலிகோ பைண்டு ந. 1-6-0

பைண்டு செய்த வால்யங்கள் 1, 4, 5, 6, 7—தனித்தனி விலை ந. 1-6-0

# அமிர்த குணபோதினி

## இது ஒரு தமிழ் அறிந்த ஒவ்வொருவர் அகத்துள்ளும் புகுந்து நிலவும் ஒரு நூதன உயர்தரத் தமிழ் மாதப் பத்திரிகை.

"அமிர்த குணபோதினி" எவ்வகைத் தொழிலுடையோருக்கும் அதிக பல னைத் தரும். படிக்கப் படிக்க விஷய மறிவதன்றிப் பேரானந்தமும் வித்வத்வமும் பெருகும்.

"அமிர்த குணபோதினி" ஸகலரும் அறியும்படி சுலப நடையில் எழுதப் படுகிறது. நமது நாட்டிற்கு நல முண்டுபண்ணும் விஷயங்களையே கொண்டிருக்கும்.

"அமிர்த குணபோதினி" ஆடவர் மகளிர் பெரியோர், சிறியோர், யாவர்க்கும் பிரியமான விஷயங்கள் உள்ளதாய் அறிவை விளக்கி உற்சாகத்தைக் கொடுப்பது.

"அமிர்த குணபோதினி"யின் முதல் பக்கத்தில் "ஆநந்த தரிசனம்" என்ற தலைப்பின் கீழ் எப்போதும் தத்துவஞான விஷயங்களும், ஈசுவர பக்தியைப் பற்றிய விஷயங்களும் நிறைந்திருக்கும். இவை யாவும் ஸர்வ மத ஸமரஸம். தேன்போல் இனித்துப் பால் போல் ருசிக்கும்.

"அமிர்தகுணபோதினி"யில்பிரதிதடவையும் உயர்தர ஆங்கில மாத ஸஞ்சிகைகளை யொப்பத் தலையங்கம், உப அங்கங்களும் தோன்றித் தேச நன்மையை நாடிய விஷயங்களும், ஆராய்ச்சிகளும் ததும்பி நிற்கும்.

"அமிர்த குணபோதினி"யில் தடவை தோறும் "பழமொழிக் குறிப்புகள்" என்ற தலைப்பின்கீழ் பல பழமொழிகளின் ஆழ்ந்த கருத்துகளையும் உலக ரகசியங்களையும் விவரிக்கப்படும்.

"அமிர்த குணபோதினி"யில் "பத்திரிகை ஆராய்ச்சி" என்ற தலைப்பில் எல்லாப் பத்திரிகைகளிலுமுள்ள சாரமான விஷயங்கள் காணப்படும்.

"அமிர்த குணபோதினி"யில் "பெண்கள் பக்கம்" எப்போதும் வெகு ஸ்வாரஸ்யமாய் இருக்கும்.

"அமிர்த குணபோதினி"யில் "பிரபஞ்ச தரிசனம்" என்ற தலைப்பில் சர்வ தேச சம்பந்தமான ஆராய்ச்சிகளுடன் இந்தியாவையும் ஒப்பிட்டு அருமையான குறிப்புகள் எழுதப் படும்.

"அமிர்த குணபோதினி"யில் ஒவ்வொரு தடவையும் "விகடப் பிரதாபன்" தோன்றுவான். மஹா விகட தூதன், விஜய விகடன் பத்திரிகைகளை யொப்ப விகடத் தலையங்கங்களும் ஹாஸ்யங்களும் தோன்றி, சலித்துப்போன மனதையும் உல்லாஸப்படுத்திவிடும். எல்லாம் உலக அநுபவ ஞானங்களே.

"அமிர்த குணபோதினி"யில் பிரதி தடவையும் "சென்ற மாதம்" என்ற தலைப்பின் கீழ் மாதாந்த விசேஷங்களைக் குறித்து ரஸமான சிறு சிறு குறிப்புகள் வரையப்படும்.

"அமிர்த குணபோதினி"ப் பத்திரிகையே எவ்விஷயத்திலும் வெகு சிறந்த தென்பதை பிறருடைய சிபார்சின்றி ஒவ்வொருவரும் தங்களுடைய அநுபோகத்தில் தாங்களே அறிந்து கொள்ளலாம்.

"அமிர்த குணபோதினி" யின் சொற்ப சந்தாவையும் உற்று நோக்குங்கள். வருஷ சந்தா ரூபா ஒன்றே.

"அமிர்த குணபோதினி"ப் பத்திரிகைக்கு இணையாக வேறெந்தப் பத்திரிகையையும் சொல்ல முடியாது. உடனே சந்தாதாரராகச் சேர்ந்து ஆதரித்து ஆனந்த பரவசர்களாகும்படி வேண்டுகிறோம். இன்றே சேருங்கள். உடனே எழுதுங்கள். என்றும் ஆதரித்து இன்புறுங்கள்.

---

"அமிர்த குணபோதினி" ஆபீஸ், 158-A, பிராட்வே, சென்னை.

# அமிர்த குணபோதினி

## ஏழாவது கமலத்தின் விஷய அட்டவணை.

அடியிற் கண்ட இலக்கங்கள் பக்கங்களைக் காட்டுகின்றன.

☞ ஒவ்வொரு பக்கத்தின் அடியிலும் அனுபவ விநோதங்களான குறிப்புகளைக் காணலாம். அன்பர்கள் அட்டவணையை முற்றிலும் உற்று நோக்கித் தாங்கள் தரும் ஒரு ரூபாய்க்குப் பத்திராசிரிய ராமாநுஜர் எவ்வளவு தூரம் உழைத்திருக்கின்றூரென்பதை யுணர்ந்துகொண்டு, பழங்காலத்துப் பத்திராசிரியரான அவரை மனஸ்பூர்வமாய் அபிமானித்து எட்டாம் ஆண்டுக்கும் புது வருட சந்தாவைச் செலுத்தி "அமிர்த குணபோதினி" யை என்றும் தொடர்ந்து ஆதரித்துவருமாறு கேட்டுக் கொள்கின்றோம். நாம் இருவரும் தூய அன்பினில் வாழ்வோம். அன்பயே நினைப்போம். அன்பு செய்யவே ஜீவித்திருக்கக் கடவோம். அன்பே கடவுள். கடவுளின் ஸ்வரூபமே அன்பு மயம் தான். நம்மிருவரது அன்பும் இனிது வாழ்க. S. G. R.

## என்னை மறக்காதே.

ஒவ்வொரு முறையும் பத்திரிகை வந்ததும் அதைப் பூர்ணமாய்ப் படிப்பதும், புதிய விஷயங்களைக் கவனிப்பதும் அத்யாவசியம். இங்கிலீஷில் "**For get me not**" (என்னை மறக்காதே) யென்ற பெயரையுடைய புஷ்பம் உண்டு. அது போல், இம்முறை வெளியாகும் "அமிர்த குணபோதினி" "என்னை மறக்கவேண்டாம், என்னை மறக்கவேண்டாம், என்னிடமுள்ள விஷயங்களையும், அடுத்த எட்டாவது வருடத்திற்கு சந்தா செலுத்தவேண்டுமென்ற விஞ்ஞாபனங்களையும் சிரத்தையோடும் படியுங்கள்" என்று நமது கையொப்ப நேயர்களைக் கேட்டுக்கொள்ளுகிறது. ஆதலின், இம்முறைப் பத்திரிகையைப் பூர்ணமாய்ப் படிக்கும்படி கோருகிறோம்.

ஓம் பரப்பிரம்மணே நம: 64-பக்கங்கள்.

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கவல்லதான விகடமும், ஆனந்தகரமான அநுபவ விநோத ஞானகலா விலாஸங்களும் நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள உயரிய மாதப் பத்திரிகை.

பத்திராசிரியர்:—திரிசிரபுரம் எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு.

“எண்ணிய எண்ணியாங் கெய்துப; எண்ணியார்
COPY RIGHT] திண்ணிய ராகப் பெறின்.” (திருக்குறள்.) [REGISTERED

| | | |
|---|---|---|
| கமலம்-7. Vol. 7. | சென்னை ஆங்கீரஸ வருஷ சித்திரை மீ 1932-ம் வருஷ ஏப்ரல் மீ | இதழ் 73. No. 73. |




“கடல்கடைந்து அமுதம்கொண்டு கலசத்தை நிறைத்தாற்போல்
உடலுருகிவாய்திறந்து மடுத்துஉன்னை நிறைத்துக்கொண்டேன்.”

“உன்னைக்கொண்டு என்னுள் வைத்தேன்” என்றார் பெரியார். எவ்வாறு உள்வைத்துத் தியானிப்பதென்பதைச் சிறிது விசாரிப்போம். பரப்பிரம்மத்தின் லக்ஷணமோ சொல்லமுடியாதது. மனம், வாக்கு, காயம் ஆகிய திரிகரணங்களுக்கு மெட்டாதது. கரையில்லாத மகா ஸமுத்திரம் போன்றது. இப்படிப்பட்ட ஸமுத்திரத்தில் ஒருவன் விழுந்தால் இன்ன இடத்தில் தரையிருக்கிறதென்று தெரியாமல் தத்தளித்துப் பிரமிப்பான். அதுபோல், பரப்பிரம்மத்தைத் தியானிக்கிறதென்றால் ஸாமான்ய ஜனங்களாகிய நமக்கு மகா கஷ்டம், அது நம் சக்திக்கு மீறியது, நம்மால் ஸாத்யமில்லாதது, கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டதுபோலுமிருக்கும். தியானம் செய்வதற்கு எதிரே ஓர் பொருளில்லாவிட்டாலும் மனதிலாவது ஒன்றைப் பாவிக்கவேண்டும். பரப்பிரம்மத்தை எந்த ரூபமாய்ப் பாவிப்பது? ஆதலின், ஈச்வரனைப் பல மூர்த்திகளாகப் பாவித்து உபாஸனைசெய்து கொண்டாடுகின்றோம். அப்படியும் மனதில் பாவித்துக்கொள்ள சக்தியற்று கண்ணுக்கு நேரே தெரியும்படி பகவானைப்போல் விக்கிரகம்செய்து அதை ஆலயத்தில்வைத்து வணங்குகிறோம். கூட்டல் கணக்கு கற்றுக்கொள்ளும் சிறுவர்கள் ஒன்று, இரண்டு, மூன்று என்று விரலை விடுவதுபோல், பக்தி மார்க்கத்தை யனுஸரிக்கும் பாலர்கள் ஆரம்பத்தில் கோயிலுக்குச் சென்று விக்கிரகாராதனை செய்து, பிறகு, மானஸீகமாகப் பூஜித்து ஞானத்தை யடைகின்றனர். மனதில் ஒரு பொருளைப்

பாவிக்காமல் அதைப்பற்றிச் சிந்திப்பது அஸாத்தியமென்பது ஒவ்வொருவருடைய அனுபவத்திலும் புலப்படக்கூடியது. இதை நன்கறிந்தோர்க்கே நம்முள் இறைவனை வைத்து வணங்கவும் தெரியும்.

ஃ

"ஈசன் செயல்" என்று உலகத்தார் சொல்வதுண்டு. இதன் கருத்து மனிதர் செய்யும் கருமங்களெல்லாம் நிறைவேறுவதற்குப் பகவத் கடாக்ஷம் வேண்டுமென்பதே. கடவுளின் கிருபையினாலேயே நம்முடைய முயற்சிகளெல்லாம் வெற்றி கொள்ளவேண்டும். எனவே, நாம் தொடங்கும் ஒவ்வொரு காரியமும் இனிது முடிதற்பொருட்டு ஈசுவர உபாஸனைசெய்வது அதியவசியம். இதுதான் பெரியோர்கள் அடிக்கடி பகவந் நாமஸ்மரணை செய்வதற்குரிய காரணம். அன்னோர் அனுஸரிக்கும்வழி பரம சிலாக்யமாதலின், நாமும் அவர்களைப் பின்பற்றி ஸதா பகவந்நாமஸ்மரணை செய்யக்கடவோம்.

ஃ

"ஆத்மா தேகம்" என்னும் இரண்டனுள் ஆத்மா சுத்தன், புண்ணியன், தேகம் மாம்ஸ மயம், அசுத்தம். ஆத்மா சத்து, நித்தியம். தேகம் அசத்து அநித்யம். பதார்த்தங்களைத் தெரிவிப்பது ஆத்மாவின் பிரகாஸமே. ஆத்மாவின் சுத்தத்திற்குப் பகவத்தியானத்துடன் உண்ணும் உணவுகளும் சுத்தமாயிருக்கவேண்டும். சில உணவுகள் சரீரத்திற்குப் புஷ்டியைக்கொடுத்து மதத்தை யுண்டாக்கும். சில மயக்கத்தை விளைக்கும். அவற்றால் பற்பல பாபகர்மங்களைப் பண்ணவும் அதோகதியில் வீழவும் நேருமாதலின் கெட்டவுணவுகளைப் புசிக்கவே கூடாது. ஆகாரமானது சரீர வளர்ச்சிக்கேயன்றி குணவிர்த்திக்கும் உபயோகப்படுவதால், மனுஷ்யன் தான் உண்ணும் உணவின் தன்மையை முன்னதாகவே அறியவேண்டிய தவசியம்.

ஃ

"பக்திலேனி பூஜா ஏமிட்டிக்கி ஏ மனஸா மனஸா" என்று வடநாட்டிலுள்ள ஓர் பக்தர் கூறுகிறார். அவஸரமும் படபடப்புங்கொண்டு பூஜை செய்வதில் என்ன பயன்? பூஜையில் ஸமர்ப்பிக்கும் பழங்களும் புஷ்பங்களும் பகவானுக்குக் கிடைக்காவா? அவற்றின் மூலமாக அவர் அன்பையன்றோ விரும்புகின்றார். பூஜைக்குமட்டுமன்று, உலக காரியங்களிலும் இது பொருந்தும். எவ்வளவுக் கெவ்வளவு சாந்தமாகப் படபடப்பின்றி இருக்கிறோமோ, அவ்வளவுக் கவ்வளவு காரியங்களைத் திருப்திகரமாகச் செய்யலாம். காரியத்திற்காக நாம் செலவழிக்கவேண்டிய ஊக்கம், வீணாக அவஸரப்படுவதிலும் படபடப்புக்கொள்வதிலும் செலவழிந்துபோகிறது.

ஃ

"கடவுளின் ஸ்வரூபம்" கடவுள் வார்த்தைகளால் திட்டமாக விவரிக்கப்படக்கூடாத ஓர் ஆச்சர்யகரமான சக்தி. அவரே சராசரங்களின் வாழ்க்கை

---

தாங்கள் புறப்படுகிற அவசரத்தில் மற்றவன் சொல்வதுகூடக் கேட்கிறதில்லை. அதை யுணராதவர்களாகவே வெட்டிக்குத் தலை யசைத்துவிட்டு அவர்கள் புறப்பட்டுப் போய்விடுகிறார்கள்.

யையும் மற்றவைகளையும் உட்புகுந்து ஆளுபவர். கடவுளிடம் நம்பிக்கை வைத்து வாழ்க்கையை நடத்துவதே வாழ்க்கையைச் சுலபமானதாகச் செய்கிறது. (காந்திஜீ) ॐ

"வேதாந்தம் என்பது என்ன?" யாதொரு வேலையும் செய்யாமல் சும்மாவிருப்பது வேதாந்தத்தின் கருத்தல்ல. ஒன்றும் செய்யாமல் மௌனமாயிருப்பது சிறந்த காரியமன்று. அப்படியானால் சும்மா இருக்கும் மரங்களும், சுவர்களும், மலைகளும் உயர்ந்தவைகளாகுமே? கோபம், அதிக ஸந்தோஷம், படபடப்பு முதலிய தீவிர உணர்ச்சிகளுண்டானால் சுறுசுறுப்பு ஏற்பட்டு விடுமென்று எண்ணலாகாது. வேதாந்தத்தில் கூறியிருக்கும் சுறுசுறுப்பென்பது அமைதியான மனதுடன் வேலை செய்வதாகும். நம்மைச் சுற்றிலும் எவ்வித ஸம்பவங்களுண்டானாலும் யாதொரு கவலையும் கொள்ளாது அமைதியுடன் மனோமுயற்சி செய்வதே வேதாந்தத்தின் கருத்து. வேதாந்த கிரந்தங்களைப் படித்தாலன்றி, யோகமார்க்கங்களை யனுஸரிப்பது கஷ்டமாகையால், அவைகளை முதலில் கற்கவேண்டிய தவசியம். கற்றதை அனுஸரித்தும் காட்டவேண்டும். அதில் பக்குவத்தைப்பெற்ற பின்பு தனியிடம் தேடிக்கொள்ளலாம். காட்டிலும், மலைக்குகையிலும், நாட்டிலும், வீட்டிலும் யோகம் செய்யலாம்; ஞானத்தை யடையலாம். மகரிஷிகளே யோக சாஸ்திரங்களையும் ஞான நூல்களையும் உண்டாக்கினார்களென் றெண்ணவேண்டாம். ஸிம்ஹாஸனத்தின்மீது வீற்றிருந்து அரசுபுரியும் மகாராஜாக்களும் சக்கரவர்த்திகளும் வேதாந்த கிரந்தங்களை யெழுதியும், அவைகளிலுள்ளபடி அனுஸரித்தும், பற்பல ரகஸ்யார்த்தங்களை ஜனங்களுக்குத் தெரிவித்தும் மகாஞானிகளாய் வாழ்ந்திருக்கின்றனர். ॐ

"எழுதினவன் ஏட்டைக் கெடுத்தான், படித்தவன் பாட்டைக் கெடுத்தான்" என்ற பழமொழிப்படி நமது மத கிரந்தங்களை எழுதிக்கொள்ளும் அந்ய மதஸ்தர்கள் தப்புந்தவறுமாய் எழுதியும் ஊகித்தும் கெடுக்கின்றனர். தவறுதலான ஊகிப்புடன் கண்டனங்கள் செய்யவும் புறப்படுகின்றனர். ஆனால், அவர்களின் மதத்திலுள்ள தவறுதல்களை நாம் எடுத்துக்கூறின் அப்போதுமட்டும், அது அவ்விதமல்ல, இவ்விதம் கொள்ளவேண்டுமென்று நமக்குத் தெரிவிக்க வருகின்றனர். அவ்விதமே, தாம் ஆராயும் பிறமதத்திலும் தவறுதலான ஊகிப்பைவிட்டு உத்தம அம்ஸங்களைமட்டும் கவனிக்க ஏன் புத்தி செல்லவில்லையோ? ॐ

"தூரத்துப்பச்சை கண்ணுக்கழகு" என்பது பழமொழி. கிட்ட நெருங்காமல் எட்டவிருந்து வெகு ஜனங்கள் சொல்வதை நிஜமென்றெண்ணிக்கொண்டிருந்தால், பல மகான்களிருப்பதாய்ப் புலப்படும். உண்மையைக் கண்டுபிடிக்கும் எண்ணத்தோடு ஒவ்வொருவருடைய குணகுணங்களையும் ஆராய்ந்து பார்க்கின், இலக்ஷம் ஜனங்களில் ஒரு மகான் அகப்படுவதும் துர்லபம். ஸந்யாஸி யாசிரமம் வாங்கிக்கொள்வோர் நாளடைவிலேயே ஆசைகளையொழிக்கும் சக்தியைப் பெற்றிருக்கவேண்டும். அப்படியின்றி தலையை முண்

---

சிலர் சுமங்கலிகளாக இருந்தும் அமங்கலிகள் போல் தோற்றுகின்றார்கள். வேறு சிலரோ அமங்கலிகள் போன்று இரவெல்லாம் விழிப்பின்றி நன்றாக உறங்கிக் காலையில் எழுபவர்களா யுள்ளார். கணவன் இருக்கையிலேயே ஏன் இந்த அமங்கலி நடையோ?

டனம் செய்துகொண்டு பின்னர், கேசமில்லையே யென்று தடவிப் பார்ப்பதும், மனைவி மக்களைவிட்டுப் பிரிந்தோமே யென்று துக்கப்படுவதும், ஏன் ஸந்யாஸம் வாங்கிக்கொண்டோமென்று பச்சாத்தாபப்படுவதும் பாபமாகும்.

ஃ

"பரிகாசம் வெகு மோசம்" ஒரு சமயம் துவாரகையிலுள்ள ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவின் பேரன்களும், மற்றச்சிறுவர்களும் நீராடச் சென்றனர். அப்போது விளையாட்டுக்காக ஒரு பாலயனுக்கு ஆறுமாத கர்ப்பிணிபோல் வேஷம் போட்டார்கள். சிறிது நேரத்துக்கெல்லாம் நாரத மகரிஷி அங்கு வரவே, அவரைக்கண்டு எல்லோரும் பரிகாஸமாக "இதோ விருக்கும் பெண் எப்போது பிரஸவிப்பாள்; பெண் பிறக்குமா?—பிள்ளை பிறக்குமா? என்றனர். நாரதர் அந்தப் பையன்களுடைய அகந்தையை யடக்கவெண்ணிக் கோபம் கொண்டவராய், "எ துஷ்டர்களே! இப்பெண் இன்னும் நான்கு மாதங்களுக்குள் ஒரு உலக்கையைப் பெறுவாள்; அதனால் உங்கள் குலம் அழியும்" என்று கூறி மறைந்தார். அவர் போனபிறகு பையன்கள் பயந்து பெண் வேஷத்தைக் கலக்க எத்தனித்தனர். பயன் படவில்லை. பொய் மெய்யாயிற்று. தக்ஷணமே கண்ணனிடம் வந்து நடந்த ஸங்கதியைத் தெரிவித்தார்கள். அவர் "மூடர்களே! மகரிஷியின் சாபம் பலித்தே தீரும்" என்று சும்மாவிருந்து விட்டார். இருடியின் வார்த்தைப்படியே உலக்கை பிறந்து குலத்தை யழித்தது. ஆதலின் பெரியோர்களைப் பரிஹாஸம் செய்யலாகாது.

ஃ

"யோகியின் நிலை" யோகியின் மனம் அறிய முடியாத ஆழமும் அமைதியுமுள்ள ஓர் ஸமுத்திரத்திற்கு ஒப்பானதென்று பாகவதத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. யோகி மனுஷ்யனே. அவன் ஸ்வாமியன்று. ஆனல், அவன் ஸமாதியிலிருக்கும்போது, அதாவது பகவானுடன் ஒன்றாயிருக்கும்போது அவருடைய தியானமே பெரிதாகித் தன்னை யிழந்துவிடுகிறான். இது எதைப்போலெனில், நதியானது ஸமுத்திரத்தில் கலப்பது போலாம். நதி ஸமுத்திரத்தில் கலந்த தக்ஷணமே அதனுடைய தோற்றமும், வேறு என்ற விகாரமும் இல்லாமற் போகின்றன. இம்மாதிரியே மனிதன் பகவானாகிய ஸமுத்திரத்தில் முழுகியவுடனே தன்னைச் சுற்றிலும் பிரம்மமயமா யிருப்பதை யறிந்து, தான் வேறாயிருக்கும் தன்மையை மறக்கிறான். வேறு என்னும் பிரக்ஞையே முழுதும் போய்விடுகிறது.

ஃ

"பகவத்கீதை" யென்னும் புஸ்தகத்தை நாலணு விலை கொடுத்து வாங்குவதால் எல்லாம் தெரிந்து விடுமென் றெண்ணத்தகாது. புஸ்தகத்தைப் படிப்பது போதாது. பல பெரியோர்களிடம் வேதாந்த விஷயமான ஸம்பாஷணைகளைச் செய்யவேண்டும். ஸதா ஸத்விஷயங்களில் புத்தியைச் செலுத்த வேண்டும். அதற்கு அனுகூலமான நூல்களையும் பத்திரிகைகளையும் வாங்கிச்

---

நான் லோகோபகாரமான காரியம் ஏதாவதொன்று செய்திருப்பேனாகில் அது, வருந்தி உழைத்ததனாலும், நிதானித்துச் சிந்தித்ததினாலும் உண்டானதேயன்றி வேறல்ல.—ஸர் ஐஸக் நியூட்டன்.

சிரத்தையாய் வாசிக்கவேண்டும். ஒவ்வொரு பெரியோரின் மனோதர்மத்தையும் அறியவேண்டும். இப்படிப் பலவித காரியங்களாலும், முயற்சிகளாலும், மனத்தாலும் தத்துவார்த்தங்களைத் தெரிந்து கொள்வது விவேகிகளின் இயல்பு.

ஃ

"மீராபாயின் பக்தி" சுமார் 350-வருஷங்களுக்கு முன் மீராபாய் என்ற பக்தை யொருத்தி இருந்தாள். இவள் இராஜஸ்தானத்திற் பிறந்த க்ஷத்திரிய ஜாதி ஸ்திரீ. மகா உத்தமி. ஸர்வாங்க ஸுந்தரி. அழகெல்லாம் உருவெடுத்து வந்ததுபோ லிருப்பாள். இவ்வுத்தமி தன்னிடமுள்ள செல்வங்களை யெல்லாம் ஸ்ரீ கிருஷ்ண மூர்த்திக்காகச் செலவிட்டு சிறந்த பக்தையாய்ப் பிரகாசித்து, பிருந்தாவனத்தில் தவமிழைத்துக்கொண்டிருந்த ரூப கோஸ்வாமியைத் தரிசிக்கச் சென்றாள். அம்மகான் பெண்களைப் பார்ப்பதில்லை யென்ற விரதங்கொண்டவராதலின் மீராபாய்க்குத் தரிசனம் கொடுக்க இசையவில்லை. அதை யறிந்த அம்மாது, "ஆகா! உங்கள் ரூபகோஸ்வாமி புருஷரா? பிருந்தாவனத்தில் ஸ்ரீ கிருஷ்ணனையன்றி வேறு புருஷர்கள் இருக்கலாகாது. ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவைத் தவிர, வேறு புருஷர் உலகத்திலுண்டோ? அப்படி யிருப்பதாய் நினைத்தால் பரந்தாமனை பிருந்தாவனத்திலிருந்து அவர் எப்படித் தியானிக்கிறார்? என, சிஷ்யர்கள் அவள் சொன்னதை ரூபகோஸ்வாமியிடம் தெரிவித்தனர். அம்மகான், "ஆகா! மீராபாய் பரமபக்தை; அவளை யுடனே இங்கு அழைத்து வாருங்கள்" என்று ஆக்ஞாபித்து, அவள் வந்த க்ஷணம் அவளை ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, "உம்முடைய பக்திக்கு என்னுடைய பக்தி இணையாகாது" என்று கூறினார், இதன் தாத்பரியம் யாதெனில், ஒவ்வொருவரும் தம்மை ஸ்திரீயாகவும், ஸ்ரீ கிருஷ்ணனைப் புருஷனாகவும் பாவித்துப் பக்தி செய்வதே சிறந்த வழியெனக் கொள்ள வேண்டுமென்பதே.

## அது ஒரு மரியாதை.

எவ்வளவு சொந்தமுடையவரேனும் பிறாது விலாசத்துக்கு வந்த பத்திரிகையைத் தான் பிரிப்பது ஒழுங்காகாது. இப்படியே, நமது கடிதங்களையும் இவன் பிரிக்கலாமல்லவா என்று அதற்குரியவருக்குத் தோன்றினால் அது மிக்க மனோவாதனை தரும். இந்த சங்கதி இதிலிருந்து வளர்ந்து பெரும் சங்கதியாகிவிடும். ஆதலின், "இதைப் பிரித்துக் கொடுங்கள்" என்று நாம் கேட்போமாயின், அது ஒரு மரியாதையாகவும், அதற்குரியவருக்குத் திருப்தியாகவும் இருக்கும். சில சமயங்களில் "நீரே பிரித்துக்கொள்ளும்" என்று அநுமதியும் கொடுப்பார்கள். எந்த சின்ன சங்கதியிலுங்கூட கௌரவமாக நடப்பதே ஒழுங்காகும். சிறிய நெருப்பிலிருந்தே பிறகு பெரிய நெருப்பு.

# நமது ஏழாவது ஆண்டு.

எல்லாம் வல்ல இறைவனது திருவருளால் நமது "அமிர்த குணபோதினி" தனது ஆறு வருடங்களையும் இனிதாகக் கடந்து, இன்று ஏழாவது பருவத்தைப் பெற்றிருக்கின்றது. "அமிர்த குணபோதினி"யை நாம் ஆதியில் ஆரம்பித்தபோது கொண்டிருந்த உத்தம லக்ஷயங்களை இதுகாறும் நமது சக்திக்கியன்ற வரையில் நிறைவேற்றி வந்திருக்கின்றோம். தமிழ்நாட்டில் அது ஒரு தனிப் புது உருவங் கொண்டு உலாவும் பிரதான பத்திரிகையாகவும் தோன்றுமாறு விசேஷித்த பிரயாசையை எடுத்துக்கொண்டிருக்கின்றோம். நாம் நடத்தும் பத்திரிகைகள் ஒவ்வொன்றுக்கும் இவ்வண்ணமே நமது மனஸ்பூர்வமான உழைப்பைச் செலவிட்டுத் தமிழகத்திற்கு நல்விருந்து செய்திருக்கின்றோம். இனியும் நாமே ஆசிரியராயிருக்கக் கடவுளின் திருவுள்ளமிருந்து, அதற்கேற்ப நமது திருப்தியும் ஜீவியமும் நீடித்திருக்குமாகில் நம்மாலான சேவையை ஆர்வத்துடனும் செய்துவரச் சித்தமாயுள்ளோம். சென்ற ஆறு வருடங்களினுடைய "அமிர்த குணபோதினி"யின் வால்யங்களையும் அன்புடன் உற்று நோக்கின் இப்பத்திரிகையின் அருமையும், உயர்வும், நமது ஓயாமுயற்சியும் இனிது விளங்கும். ஒரு பத்திரிகைக்கு அதனை ஆரம்பித்த ஆசிரியராலும், ஆசிரியருக்கு அவர் சிரமப்பட்டு வரைந்துத் தயாரித்த பத்திரிகையாலும், பத்திரிகாபிமானிகளுக்கு ஆசிரியரையும் பத்திரிகையையும் ஆதரித்து அபிமானித்த வகையாலும் ஈடில்லாப் பெரும்புகழும் பிரக்யாதியும் சித்திக்கின்றன.

ஃ

சென்ற வருடத்தில் நமது "அமிர்த குணபோதினி" பல்வகை இடர்களிற் சிக்கியதெனினும், கடவுளின் கருணையால் அவை யாவும் சூரியனைக் கண்ட பனிபோன்றும் விலகி, ஐந்துமாத ஸஞ்சிகைகளும் தொடர்ச்சியாய் அதிசீக்கிர காலத்திற்றானே பிரசுரம் பெற்று அன்பர்களின் மனதிற்கு ஆநந்தத்தைத் தந்திருக்கின்றதென்பதை யாவருமறிவர். நமது கையொப்பநேயர்களுக்கு "அமிர்த குணபோதினி"யிடத்தும், அதன் ஆசிரியரிடத்தும் உள்ள அளவுகடந்த அபிமானம் இந்த ஏழாவது வருடத்தின் ஊழியத்தினை வெகு உற்சாகத்துடனும் நடத்துதற்குப் போதிய துணை செய்யுமென்று நம்புகின்றோம். ஒவ்வொரு சந்தாதாரரும் மாதத்திற்கொரு புது சந்தாதாரரைச் சேர்த்துக்கொடுக்க முயல்வாராயின் அது காலசகாயமாயும், பத்திரிகையை இன்னும் உன்னதமாக நடத்துதற்குப் புதிய ஊக்கம் புகட்டுவதாயுமிருக்குமென்பதை விநயபூர்வமாய்த் தெரிவித்துக்கொள்கின்றோம். மனிதர்களின் உத்தமசிந்தைக்கும், நன்னோக்கத்திற்கும், பொருளின் அருமை பெருமைக்கும் தக்கவாறு அபிவிர்த்தியுமிருக்கும். "அமிர்த குணபோதினி" புனிதமான ஒரு உயரிய பொருள் என்பதையும், அதனை நடத்தும் ஆசிரியர் பழங்காலத்துப் பத்திராசிரியர்களின் திருக்கூட்டத்தைச் சேர்ந்தவராய் உத்தமமான சேவை செய்பவரென்பதையும் நன்குணர்ந்த அன்பர்கள் இந்த ஏழாவது வருடத்தில் முன்னிலும் விசேஷித்த அபிமானம்கொண்டு ஆதரித்து அபிவிர்த்தி செய்வார்களென்று எதிர்பார்க்கின்றோம். சர்வலோக சரண்யராகிய ஜகதீசன் நம்மெல்லோரையும் ரக்ஷிப்பாராக. சுபம்.

எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு,—பத்திராசிரியர்.

அமிர்தகுணபோதினி

ஆங்கீரஸ ஞு சித்திரை மீ 1-உ

# ஒருவனதே உலகு.



ம்; அவ்வொரு தனி முதல்வன் படைப்பே இவ்வுலகு. அவன்றன் திருவிளையாடலே மாந்தர்தம் ஜீவிய நாடகமாம். ஒருவனிலிருந்தே இவ்வுலகு பிரஜாவிருத்தி காண்பதாயிற்று. ஆதியில் விதைத்த ஒரு வித்தினின்றே எண்ணற்ற வித்துக்களும், செடி—கொடி—விருக்ஷங்கள் பலவும் பல்கிப் பெருகுவதாயின. கிறிஸ்துவ வேதப்படி ஆதி மனுஷ்யனாவார் ஆதாம்—ஏவாள் என்பவர். இன்று இவ்வுலகிடை தோற்றும் மானிடவர்க்கம் ஒவ்வொருவரின் சந்ததியே யன்றோ? அநேக குடும்பங்களை ஒன்று சேர்த்து நோக்கின், அத்தனைக் குடும்பங்களும் எங்கோ எளியனாய்ப் பிறந்த ஒருவனிலிருந்தே தோன்றியதாய்த் தெரிய வருகின்றது. ஒரு தீபத்தினின்றும் பல தீபங்கள் கொளுத்தப்படுகின்றன. ஒரு ஆசிரியரிலிருந்தும் பல மாணவர்கள் பயிற்றப்பட்டுத் தோன்றிப் பின்னர் அன்னோரும் ஆசிரியராகிறார்கள். ஒரு நங்கையை மருமகளாகக் கொண்டுவந்த வீட்டில், அந்த சுந்தரியிடமாகப் பல குமாரர்கள் உதிக்க, அவர்கட்குப் பின்னாளில் இல்லறத்துணைவிகள் வந்து கூட, இங்ஙனம் பல மருமக்கண்மா ராகிறார்கள். முதலிற் பிறந்த குழந்தைக்காக வாங்கிய விளையாட்டுச் சாமான்கள், பிறகு தோன்றிய பல குழந்தைகட்கும் விளையாட உபயோகமாகின்றது. ஒருவன் தனக்கென அமைத்துக்கொண்ட இல்லம் பிற்றைநாளில் எத்தனையோ ஆயிரவர் வசித்தற்கு ஏற்றதாய் நிலவுகின்றது. அயோத்தியில் ஒரு ராமபிரான் தோன்ற, இன்றோ பாரதஞாலம் முற்றும் ராமனின் கோயில்கள் நிறைந்து எங்கணும் ராமபஜனை ஒலிக்கின்றது. அவ்வொரு ஆயர்பாடிக் கண்ணன் இன்று நம்மெல்லோரின் ஹிருதயங்களையும் தன் வாஸஸ்தலமாகக் கொண்டிருக்கின்றான். அன்று தோன்றிய ஒரு பகவத்கீதையே இன்று பாரதகண்டம் முற்றும் பரவி நிற்கின்றது. ஒரு வான்மீகியும் கம்பரும் தந்த இராமா

---

புதுமை என்பது அது தோன்றுதற்கு முன்னிருந்த பழமையைத் தள்ளாது தழுவிக்கொள்ளுமாயின் இரண்டுக்கும் பயனும் சிறப்பும் உண்டாகும்.

யணம் இன்று எத்தனையோ மக்களின் சொந்த சொத்தாய் தியானமிர்தமாய்த் திகழ்கின்றது. அன்று ஒரு ஔவையார் கூறிய "அறஞ்செய விரும்பு" என்னும் 'ஆத்தி சூடி' இன்று தமிழ்ச் சிறுவர் சிறுமிய ரெல்லோருக்கும் நல் விருந்தன்றோ?

ஃ

உலகில் தோன்றிய புதுமைகள், ஆச்சரியமான சங்கதிகள், ஸ்தாபனங்கள், நிர்மாணங்கள்—மற்றும் எத்தனையோ விஷயங்கள் யாவற்றிற்கும் அவற்றை உலகில் தோற்றுவித்த ஆதி புருஷர் ஒருவர் இருக்கவே காண்கின்றோம். அவ்வொருவரின் நினைவில் சட்டென்று தோன்றிய ஒரு குறிப்பின் பலனை இன்று உலகினர் அனைவரும் அனுபவித்துப் பயன்—நலம் பெறுவோராயினர். இத்தனை நலமும் பயனும் அவ்வொருவரின் உள்ளத்தே உண்டாகிய தனிச் சொத்தேயன்றோ? அந்த ஒருவனுடையதை உலகுமுற்றும் தன்னுடையதென ஏற்றுக்கொண்டதனால்—அந்த "ஒருவனுடையதே உலகு" என்று ஏன் கூறக்கூடாது? ஒரு புதுமுறையை ஒருவர் கண்டுபிடிக்க, பின் அப்புதுமுறையே உலகமுழுதும் பரவிவிடுகின்றது. ஆதியில் 1838-ம் வருஷத்தில் மூவர் ஒன்றசேர்ந்து கண்டுபிடித்த **தந்தித்தபால்** இன்று உலகமுழுதக்கும் வியாபித்து நிற்கின்றது. மூவர் ஒன்றாயிருந்து கண்டறிந்ததாயினும் ஆதியில் அந்த எண்ணத்தைக்கொண்டவர் **மோர்ஸ்** என்ற பண்டிதரேயாவர். அவ்வொருவரதே இன்று இவ்வுலகு. எலக்டிரிக் என்னும் மின்சார சக்தியைக் கண்டுபிடித்தவர் **எடிஸன்**. அவ்வொருவரின் உள்ளத்தில் தோன்றிய அறிவானது நீண்டகாலம் பாடுபட்டுக் கிடைத்த ஞானமாகும். அதனை உலகம் ஏற்றுத் தன் சொந்த நிதியாக்கிக் கொண்டதால், எலெக்டிரிக் தெய்வம் எடிஸன் என்று ஏன் சொல்லக்கூடாது? **காக்ஸ்டன்** என்பவர் கண்டுபிடித்த அச்சுவித்தை உலகினை அறிவின்மயமாக மாற்றிவிட்டது. மோட்டாரைக் கண்டுபிடித்தவர் ஒருவர் இன்று அவ்வொருவருடையதே இவ்வுலகு. நவீன நாகரீகத்தின் அவசியப் பொருள்களுள் ஒன்றாக இன்று மோட்டார் விளங்குகின்றது. 250-வருஷங்களுக்குமுன் இங்கிலாந்தில் லிங்கன்ஷயர் என்னும் மாகாணத்தில் பிறந்த ஸர் ஐஸக் நியூட்டன் என்ற சாஸ்திர பண்டிதர் கண்டுபிடித்த சாஸ்திர ஆராய்ச்சி முறைகள் இன்று உலகமுழுதக்கும் பயனளித்து நிற்கின்றன. அவர் கண்ணாடிகளைத் தூர திருஷ்டிக்கு உபயோகமாகும்படி செப்பனிட்டார். ஒளி, நிறம் இவைகளுடைய தன்மையைக் கண்டறிவதற்கு உபயோகமான பல பரிசோதனைகளையும் செய்தார்.

---

ஒரு சமயத்தில் அதிகம் நெருங்கினின்றுப் பின் தூர தூரப்போய், அப்பால் மறுபடியும் வந்து, பின் பல நாள்வரை கண்ணெதிர் படாமலே கழிந்து, பின் அபூர்வமாய்க் காட்சி தருவாரும் சிலர் உண்டு.

எந்த வஸ்துவும் பூமியில் வந்து விழவேண்டியநிமித்தம் என்ன வென்று ஆலோசித்தார். அப்படிச் சிந்தித்துக்கொண்டே ஒருநாள் அவர் தோட்டத்தில் உட்கார்ந்திருக்கையில், மரத்திலிருந்து அத்திப்பழம் ஒன்று கீழேவிழ, அதைப் பார்த்வுடனே, எந்த நியா யத்தால் அத்திப்பழம் பூமியில் வந்து விழுகிறதோ, அதே நியாயந் தான் ஆகாயத்திலுள்ள கிரகங்களுக்கும் என்கிற கருத்து நியூட்ட னின் மனதில் தோற்றிற்றும். அதன்முடிவு எவ்விதமாயிற்றெ னின், அவ்விஷயத்தைப்பற்றியே அவர்சிறந்தபுஸ்தகமொன்றை எழு திவிட்டார். ஒருவரின் மனத்தில் சட்டென்று தோன்றுகிற அற்புத மான நூதன எண்ணங்கள் ஒவ்வோர் ஸம்பவங்களையும் காட்சிகளை யும் காண்பதினின்றுமே உதிக்கின்றன. ஒரு நிகழ்ச்சியைக் காணும் பொழுது ஒருவருக்கு உதிக்கும் புதிய எண்ணம் அதே நிகழ்ச்சியை நோக்கும் அருகிலிருப்போருக்குத் தோன்றுவதில்லை. நமக்குப் பலவிதமான நன்மைகளையும் சௌக்கியங்களையும் விளைவிக்கின்ற சாஸ்திர சம்பந்தமான பல சிறந்த விஷயங்களைப் புதிதாய்க் கண்டு பிடிப்பதும், உள்ளவைகளைச் சீர்திருத்தி விருத்தியடையச் செய் வதுமாகிய இவை யாவும் மற்ற விஷயங்களைப்போலவே ஒவ்வொரு சமயத்திலே மனதில் தோன்றிய யுக்திகளாலேயே உண்டாகின்றன. அந்த சந்தர்ப்பத்திலுண்டான புது எண்ணத்தையே மேதாவிக ளான அன்னோர் பிறகு காரியப்பொருளாக்கி உலகுக்கு உதவி, அவ்வித அறிவு சம்பந்தப்பட்டவரையில் உலகையே தம்மொருவ ருடையதாகக் கொண்டுவிடுகின்றனர். உலகத்திலே பல சிறந்த காரியங்கள் செய்து தமது பெயர் என்றும் விளங்குமாறு புகழ் பெற்றவர்கள் அனைவரும் இளமையிலேயே தமக்குத்தாமே விஷ யங்களை ஆலோசிக்கப் பழகியவர்களாவார்கள். அத்தகைய மேதாவி கட்கு இவ்வுலகும் சொந்தமாய் விடுகின்றது.

ஃ

இவ்விதமே, ஒரு சிறு ஸம்பவத்தினின்றும் ரோலாந்துஹில் என்பவர் சகாயமான தபாற்கூலியில் கடிதங்கள் அனுப்பும் வகை யைக் கண்டறிந்தார். இங்கிலாந்தில் ஒருவன் தன் சகோதரியுடன் ஏற்கெனவே பேசிக்கொண்ட திட்டப்படி தான் க்ஷேமமாயிருப் பதை அறிவிக்கும் குறியாக ஒரு வெள்ளைக் கடிதத்தை ஏதும் எழு தாமலே மெல்லிய காகித உறையிற்போட்டுத் தபாலில் அனுப்ப, தபாலைப் பெறுவோரே தபாற்கட்டணம் செலுத்துவதாயிருந்ததால் அக்கடிதத்தைத் தபாற்காரன் சகோதரியிடம் கொண்டுவர, அவள்

---

தன்னயம் முற்றிய பாவிகளைப் பிரிந்து, நெடுந்தூர நாடொன்றில் நாட் கடலைக் கழித்து, அங்குள்ள மசானத்திலேயே முடிந்து விடுவதுமேல். கடவுள் கிருபை யுண்டாயின் செல்வந் திரட்டிவந்து அந்தப் பாவிகளின் முன்னே நன்கு வாழ்ந்து காட்டலாம், அன்னோர் வயிறு எரியப் பண்ணலாம்.

அதை வாங்கிப் பார்த்து அதைப் பிரிக்காமலே நன்கு கவனித்து, உள்ளிருப்பது வெள்ளைக்கடிதம் என்றறிந்து, தன் சகோதரன் சுகமாக இருப்பதாய் ஊகித்து, அக்கடிதம்பெற சக்தியில்லையென்று திருப்பிவிடுவாள். இவ்வித மோசச் செய்தியை ரோலாந்துஹில் கேட்டதும், தக்ஷணமே சுலபமான தபாற்கூலி ஏற்படுத்தும் வழி அவர் மனதிற்றோன்றி, இன்று உலகமுழுதுமே ரோலாந்துஹில்லுக்குச் சொந்தமாய்விட்டது. இவ்வண்ணமே, ஜேம்ஸ்வாட் என்பவர் அடுப்பில் சாதம் கொதிக்கும்போது பானையின் மேல்மூடியை உள்ளே கொதிக்கும் நீராவி மேலே தூக்குவதைக் கண்டதிலிருந்தும் நீராவியின் வல்லமையைக் கிரகித்து அதை உலகுக்கு உதவ, இன்று உலகு அவ்வொருவருடையதே யாயிற்று. அவ்வொருவர் கண்டுபிடித்தது இன்று பல்லோருக்கும் பயன்படுவதாய் முடிந்தது. இத்தாலியா தேசத்தில் பைசா நகரத்தில் 1564-ம் வருஷத்திற் பிறந்த **கலீலியோ** என்பவர் செய்த சாஸ்திராபிவிர்த்திகளே இன்று உலகமுற்றும் வழங்குவதாகி சாஸ்திரவுலகே அவருடையதாயது. முன்பு இங்கிலாந்திலிருந்து இந்தியா வருவதற்கு 84-நாட்கள் வேண்டியிருந்தன. பிறகு 1845-ம் ஆண்டில் 25-தினத்தில் இந்தியாவுக்கு வரக்கூடிய தரைவழியொன்று கண்டுபிடிக்கப்பட்டது. அப்பொழுதுங்கூட வழியில் இருக்கும் சுவேஸ் பூஸந்தி என்ற இடத்தை இருப்புப்பாதை வண்டியிலேறிக் கடந்து செங்கடலின் தீரத்தில் மறுபடி இறங்கிப் பின் கப்பல் ஏறவேண்டியதாயிருந்தது. இவ்வண்ணம் சிறிதுதூரம் தரைவழியாய்ச் சென்று மறுபடி மரக்கலமேறும் கஷ்டத்தை நிவர்த்திப்பதற்காகத் தரைவழியே யில்லாமல் சுவேஸ் பூஸந்தியின் வழியாய் ஒரு பெரிய வாய்க்கால் வெட்டி மத்திய தரைக்கடல்—செங்கடல் இரண்டையும் ஒன்றுசேர்த்து விடுவதென்று ஓர் யோசனையுண்டாகி, சூக்ஷ்ம புத்தியும் செய்தொழில் முயற்சியும் உள்ள **பர்டினண்டு டி லெஸ்ஸேப்ஸ்** என்னும் பிரான்சு தேசத்தவரால் சுவேஸ் வாய்க்கால் வெட்டப்பட்டு 1889-ம் வருஷம் நவம்பர்மீ 17-ம் தேதி இக் கால்வாயில் முதல் மரக்கலம் ஓடலாயிற்று. இதன் பயனாக இந்தியாவுக்ும் இங்கிலாந்துக்கும் உள்ள சம்பந்தம் பலப்படுவதாகி, நேரான வழிப்போக்கு ஏற்பட்டு, இரண்டு தேசங்களிலும் வர்த்தகம் மேன்மேலும் விருத்தியாகும்படி ஆயிற்று. இன்று வர்த்தக உலகம் அடைந்துவரும் நன்மை மேற்சொன்ன பிரான்சு தேசத்துச் சிற்பியொருவருடையதே யன்றோ?

∴

விசிஷ்டாத்வைதத்தை இராமாநுஜர் ஸ்தாபித்தார். அதை நூற்றுக்கணக்கான சிஷ்யர்கள் பரப்ப, ஆயிரக்கணக்கானவர் பின்

பற்றினர். புத்தரும், கிறிஸ்துநாதரும், நபிகள் நாயகமும் தோற்று வித்த மதங்கள் இப்பொழுது உலகெங்கணும் பரவி அன்னோரு டையதாக இவ்வுலகின் பல பகுதிகள் ஆகியுள்ளன. ஒரு ஸ்ரீ ராம கிருஷ்ண பரமஹம்ஸரும், ஒரு விவேகானந்தரும் அன்று பரப்பிய கொள்கைகளைப் பல்லாயிரவர் பின்பற்ற, அவர்களுடைய உலகாக வும் இன்று இந்நாடு மாறியுள்ளது. சூரியவமிசம், சந்திரவமிசம் என்பன வெல்லாம் ஒவ்வொரு தனித்தவரிடமிருந்து தோன் றியவைகளே; பின்னர் அன்னோரது உலகாகவும் மாறின. ஒரு ராஜாராம் மோஹன்ராய் தோன்றப்போய், அவரால் உடன் கட்டை யேறுதல் நிவர்த்திப்பெற்று இன்று அவ்விபத்துக்குத் தப்பி ஜீவிக்கும் பெண்கொடிகளெல்லாம் அவ்வொருவரின் அருளைப் பெற்றவர்களே. உலகில் ஆங்காங்கு வசிக்கும் பல லக்ஷம் பிர ஜைகள் அவ்வத்தேச அரசர்களின் குடிகளேயாக, அந்த அரசர்க ளுக்குச் சொந்தமான உலகில் அக்குடி ஜனங்கள் வாழ்வதாகின்ற னர். ஒவ்வொரு குடும்பமும் ஒவ்வொரு தலைவனைக்கொண்டு, அவ னவன் வழியாக அந்தந்தக் குடும்பங்களும் நடந்து வருகின்றன. ஒருவன் ஒரு சிறு வியாபாரத்தைத் தொடங்கி நாளடைவில் பெரிய வியாபாரியாக மாற, அவன் ஸந்ததியாரும் அந்த வியாபாரத்தைத் தொடர்ந்து நடத்தி மிகு பிரபலஸ்தர்களாகின்றனர். இவ்வளவும் ஆதியில் முன்வந்த அச்சிறு வியாபாரியினுடைய உலகேயாகும். அன்று தையல் யந்திரத்தையும், கிராமபோனையும் கண்டுபிடித்தவ ரது அறிவின் துணையிலேயே இன்று இவ்வுலகமும் உள்ளது. பல உறவினர்களும் நண்பர்களும் ஒருங்குகூடி ஆநந்தமடையும்படிச் செய்பவன் அப்போது மணமாலை சூட்டிக்கொள்ளும் ஒரு மண மகனே யாவான். அவனது விவாக சந்தோஷத்தைப் பலரும் பங் கிட்டுக்கொண்டு அவன் வழியிலே அவனைப்போன்றும் மகிழ்வோ ராகின்றனர். உலகுதோன்றிய நாள்முதல் இன்றுவரை அவரவரால் கையாளப்பட்டு வரும் விஷயங்களுக்கு அவ்வவற்றை ஆதியில் கண்டுபிடித்த ஒவ்வொருவரும் ஒரு காரணமாகி, அவ்வொவ்வொரு வரும் அததற்குக் கர்த்தாவாகின்றனர். உலகினர் உபயோகப்படுத்து வதும் பரப்புவதும் அவர்களுடைய சொத்தேயன்றோ? அந்த ஒருவ ருடையதை உலகு ஏற்றுக்கொண்டதனால்—அந்த ஒருவருடையதே உலகு என்று ஏன் சொல்லவொண்ணாது? கொலம்பஸ் என்பவர் கண்டு பிடித்த அமரிக்கா கண்டமும அதன் இன்றைய பிரவித்த வாழ்வும் அவ்வொரு கொலம்பஸினுடையதே யாகுமன்றோ? ஒரு நூலாசிரியரின் ஒரு தனி அறிவு பல்லாயிரக்கணக்கான மக்களின் அறிவாக மாறிவிடுகின்றது. அத்தனை ஆயிரமக்களும் அந்நூலாசிரி யரின் உலகேயன்றோ? ஒரு தேசத்தினரின் ஜன அபிப்பிராயங்களைப்

---

பிறருக்குத்தான் மேற்பட்டிருக்கவேண்டுமென்று முயல்வது நியாயமே. ஆயினும் அதற்காகப் பிறரைப் பங்கப்படுத்துவது ஒழுங்கன்று.

பத்திரிகைகள் ஒரு உருவகப்படுத்தி வேகமும் புதிய எழுச்சியும் கொள்ள வைக்கின்றனவாக, அந்த அறிவானது அவ்வப்பத்திரிகைகளின் ஆசிரியர்களாகிய ஒவ்வொரு தனித்த மனிதர்களின் மூளையில் தோன்றிய கருத்துகள் தானே? அவ்வழியில் அக்கருத்துகளை ஏற்ற உலகமும் அப்பத்திராசிரியர்களின் உலகே யாதல் காண்க. இங்ஙனமாக, ஒருவனது உலகாய், உலகும் அவனது வழியில் நிற்பதாகி, அருமைபெருந் தெய்வத்தின் அதிகாரம் அவ்வோருவரின் மூலமாகவே உலகில் தோன்றுவதுமாகி—ஒளிவீசும் மாண்பினை என்னென்று புகழ்வோம்? இறைவன் தமது தனித்த சக்திகளை—அதற்கென்று குறித்த ஒரு சிலருக்கு அனுக்கிரகித்தருள, அன்னோர் கருணையுள்ளத்தோடும் உலகுக்கு உதவ, உலகும் அவற்றைக் கொண்டு நலம் பெறுகின்றது. ஒரு குடும்பத்திலோ, ஒரு வர்த்தகத்திலோ, ஒரு ஜன நிர்மாணத்திலோ தலைமையாயிருந்து நடத்துவிப்பதற்கான ஆண்மை பொருந்திய பிரமிக்கத்தக்க சக்தி தத்துவங்கள் ஒருவனுக்கே அமையப் பெறுகின்றன. அவன் தோல்வியுறின் அவனை நம்பியவர்களும் கேவலப்படுகின்றனர். அவன் மாணமுற்றால் அவன் நிழலிலுள்ளோரும் அனாதைகளாகின்றனர். அவன் வெற்றிபெறின் அவன் காலின் கீழுள்ளோரும் உயர்வடைகின்றனர். அவனுக்கு அமைந்த சக்திகள் மற்றவர்க்கு அமைவதில்லை. அவனே எதிலும் பிரதானஸ்தனாய்த் தலைமைப் பிரபுத்வம்கொண்டு இலங்குகின்றான். இது கடவுள் அவனுக்கு அருளிய அனுக்கிரகமாகும். இத்தகைய மாட்சிமையாளன் எவனோ அவன் வழியிலேயே உலகும் செல்லும். அவ்வோருவனதே உலகு.

## நீ அவன் சொல்லைப் பரவச்செய்யாதே.

வீட்டின் ஒரு முக்கிய வேலையை ஒருவன் செய்து கொண்டிருந்து, பிறகு ஒரு சச்சரவு புகுந்து உன்னிடம் வந்து தான் இனி அந்த வேலையைச் செய்யப்போவதில்லையென்கிறான். அதைக் கேட்டதும் நீ பாதிவேலையில் விடலாமா என்று ஆத்திரப்படாதே. அப்படி ஆத்திரப்பட்டு நீ வீட்டிற்குள் போய்ச் சொல்லுவாய் என்றும், உன்னால் பரவட்டும் என்பதுமே அவன் எண்ணம். ஆதலின், நீ கேட்டும் கேளாததுபோலிருந்துவிடு. அவனும் தன் தந்திரம் பலிக்கவில்லையென்றும், தன்னை யாரும் வேலை செய்யும்படிக் கெஞ்சவில்லையென்றும் அறிந்து பின் தானாகவே வேலைசெய்யப் போய்விடுவான்.

# ஓர் சமுசயவாதியும் வேதாந்தியும்.



ஒரு காலத்தில் ஒரு வேதாந்தியும் சமுசயவாதியும் சந்தித்தனர். அப்போது பரஸ்பரம் இருவருக்கும் பின்வருமாறு சம்பாஷணை நடந்தது :—

சமுசயவாதி :—ஐயா, வேதாந்தியே! ஓர் சந்தேகம்.

வேதாந்தி :—அஃது யாது தெரிவிப்பாய்?

சமுசயவாதி :— சொர்க்கலோகத்தில் வசிக்கும் புண்ணியாத்துமாக்களும் தீங்கிழைக்குமிடத்து அவர்கள் பகவானால் அக்கினிக்குழியில் வீழ்த்தப்பட்டுத் தண்டிக்கப்படுகின்றனர் என்று நீர் உரைக்கின்றீரே, அது உண்மையேதானா?

வேதாந்தி :—ஆம், அதற்கு என்ன ஆக்ஷேபம்?

சமுசயவாதி :—நன்று. அவர்கள் தான் பாவங்களை யெல்லாம் தகித்து வென்று பாப ரகிதர் என்று பெயர் பெற்ற அக்கினி ஸ்வரூபிகளாயிற்றே. அவர்கள் திரும்பவும் அக்கினிக்குழியில் வீழ்த்தப்படுவதால் அவர்களுக்கு என்ன துன்பமுண்டாகும்? நெருப்பை நெருப்பு என்ன செய்யும்? இதற்கு உம்முடைய சமாதானம் யாது?

வேதாந்தி :—உன் சந்தேகம் இவ்வளவுதானா? இன்னும் ஏதாகிலும் உளதா?

சமுசயவாதி :—அதோடு போவானேன்? இரண்டாவது, எல்லாம் ஈசன் செயல்; ஒவ்வொன்றும் அவனுடைய ஆக்ஞைப்படிதான்; "அவனன்றி ஓரணுவும் அசையாது" என்று நீரேபன்னிப்பன்னி யுரைத்துவிட்டு, திரும்பவும் பாவத்தைச் செய்தவன் தண்டிக்கப்படுகிறான் என்று நேரிற் கண்டுவந்தவரைப்போற் பேசுகின்றீர். உண்மையில் உம்முடைய சொற்பிரகாரம் பார்க்கப்போனால் நாம் செய்வதென்பது என்ன இருக்கிறது? ஒருவன் தன் கைப்பொம்மையைக் கருத்துக்கிசைந்தவண்ணம் நடிப்பித்துக் காட்டி, பின்பு அவ்விதம் ஆடியது அதினுடைய குற்றமேயென்று அதன்பேரிலேயே பழி சுமத்தித் தண்டிப்பவனும் உண்டா? இதையும்விட்டால் சில சமயங்களில், யாவரேனும் துயரத்தால் மனக்கவலையுறும்போது—"அயன் விதியைத் தடுக்க யாராலும் முடியாது; அவரவர்களின் தலைஎழுத்துப்படி நடந்தே தீரவேண்டும்" என்றும் சட்டம் ஓதுகின்றீர். இங்கேயும் பாரும்; ஒவ்வொன்றும் கடவுளின் ஆக்ஞைப்படியோ, அல்லது அயன் விதிப்படியோ நடப்பதாயிருக்கையில் மீண்டும் மனிதன்பேரி

---

பூரி சுட்டு அதனுடன் சக்கரை வைத்து உண்பது ஒரு ருசி. குழம்பில் தொட்டுப் பூரியைத் தின்பது ஒரு ருசி. எதுவுமின்றி பூரியை மட்டும் தின்பது ஒரு ருசி. வெகுநேரம் மெதுவாகத் தின்பார் சிலர். சீக்கிரம் புசிப்பார் சிலர். ஒரு ருசியையே—இன்பத்தையே பலவித வழியில் வெவ்வேறு விதமாய்ச் சுவைப்பது அந்தச் சுவையை மேன்மேலும் அதிகப்படுத்திக் கொள்வதாகும்.

லேயே பழிபோடுவது என்ன நியாயம்? இந்தப் போலி நியாயத்தை யாவர்தான் ஒப்புவர்?

வேதாந்தி:—உன்னுடைய கேள்விகள் யாவும் தீர்ந்ததா?

சமுசயவாதி:—இன்னும் பாரும். "அம்பட்டன் குப்பையைக் கிளறினால் அவ்வளவும் மயிர்" என்றபடி எதைப் பார்த்தாலும் அப்படியப்படித்தான் இருக்கிறது. போனது போகட்டும். இவ்வளவிற்கும் காரணபூதனாய் யாரோ கடவுள் ஒருவர் இருக்கிறார் என்கிறீரே; அவருடைய மகத்துவத்தையாவது, அல்லது இந்த விஷயத்தில் உம்முடைய சொல்லையாவது உண்மையென்று நம்புவதற்கு, எங்கே அவரைக் கொஞ்சம் காட்டும் பார்க்கலாம்.

வேதாந்தி:—உம்முடைய கேடுகாலத்திற்குத்தான் இப்படி உமது புத்தி மாறியிருக்கிறது. எவன் உத்தம விஷயங்களை அலக்ஷியம் செய்கிறானோ, எவன் நன்றிகெட்டுப் பரம துரோகியாகிறானோ—அத்தகையோன் தன் அழிவுகாலத்திற்கே அதுவரையிலும் இல்லாத சண்டாளச் செயல்களுக்கு ஆரம்பித்துக்கொள்கிறான். அதுமுதல் தன்து ஸர்வ நாசத்துக்கு வேண்டியவற்றையே புரிந்து தெய்வ கோபத்திற்குப் பாத்திரனாய்ப் படுபாவியாகின்றான். அதுபோல நீரும் இப்பொழுது கண்டபடி உளறுகின்றீர்.

என்று கூறிவிட்டு, அவனை வெல்வதற்குத் தக்க சூழ்ச்சி தண்டோபாயந்தான் என்று தனக்குத்தானே சிந்தித்துக்கொண்டு, திடீரென்று அவன் குடுமியை எட்டிப்பிடித்து வளைத்திழுத்து முதுகில் ஓங்கி ஒரு குத்து விட்டுக் கீழே தள்ளிவிட்டார். அதனால் அவன் ஆற்றற்கரிய கோபங்கொண்டு, 'அட, நீ எம்மாத்திரம்' என்று அவர்மேல் நச்சரவமெனச் சீறி எழும்ப, உடனே வேதாந்தி மறுபடியும் அவனுக்கு ஒரு உதை சன்மானம் பண்ணித் திரும்பவும் அவனை வீழ்த்திவிட்டு அவனுக்குமுன் நடப்பாராயினர். ஃ

பின்பு சற்றுநேரத்திற்கெல்லாம் அச்சமுசயவாதி எழுந்து அரசன்பாற் சென்று வேதாந்தியின்மேல் குறை கூறி முறையிட, அரசன் அத்தக்ஷணமே வேதவிற்பன்னரை வருவித்து, "இஃதேது, இன்று நம்மிடத்து எந்நாளுமில்லாத நூதனச் செய்கை காணப்படுகின்றது?" என்று வினவ, அதன்பேரில் அவர், மேல்நடந்த விருத்தாந்தங்களை யெல்லாம் விஸ்தாரமாய் எடுத்துரைத்து,

ஃ

"இவனை நான் அடித்ததாகச் சொல்லுகிறான், வாஸ்தவந்தான். இவனுடைய தேகமோ எலும்பு தோல் மலஜலாதிகளால் உருவாக்கப்பெற்றது. என் கரமும் அவ்வகைத்தே. ஒன்றுக்கொன்று பேதமென்பது எள்ளளவு மில்லாத நெருப்பை நெருப்பு யாதொன்றும் செய்யாதபோது, (அதே பிரகாரம்) ஒரே வகையான தேகம் ஒன்றோடொன்று தாக்குவதால் எதற்குத் தானாகட்டும் என்ன கெடுதி யுண்டாகும்? என் கைக்கு இல்லாத உபத்திரவம் இவன் தேகத்தில் மட்டும் உண்டானதாக முறையிடுவது அதிசயிக்கத்தக்கதா யிருக்கிறது. ஃ

---

விருத்தியடைய நினைப்போனுக்கு உலகமே ஒரு பெரிய பள்ளிக்கூடம். கற்க நினைப்போன் எந்த அற்பத்திலிருந்தும் பெரிய ஞானங்களை அறியலாம். உலகுக்கும் உபகாரமாய் அவற்றை உபதேசிக்கலாம்.

இரண்டாவது, ஒவ்வொன்றும் கடவுள் ஆக்ஞைப்படியோ, அல்லது பிரமனுர் விதித்த விதிப்படியோ அல்லாமல் மனிதன் தன் சுயேச்சையாய் யாதொன்றும் செய்யாதபோது, அதே மனித வர்க்கத்திற் சேர்ந்த நான் மாத்திரம் இவனை என் இஷ்டமாய் அடித்ததாக என்மேற் குற்றமுறைப்பது என்ன நியாயம்? இதுவும் ஒருக்கால் கடவுள் எனக்கிட்ட ஆக்ஞை தானே?—அல்லது பிரமன் அவன் தலையில் விதித்த விதியோ அதனை யறிந்தவர் யார்?

ஃ

மூன்றாவது, கடவுளைக் காட்டினுலல்லாது அவருடைய மகாத்மியத்திலோ, அல்லது என்னுடைய சொல்லிலோ நம்பிக்கை விழாதபோது, அத்தனை உபத்திரவத்தையும், இவனுடைய சொல்லையும் நான் நம்புவதற்கு—ஏதோ அந்த உபத்திரவத்தைக் கொஞ்சம் காட்டச் சொல்லும் பார்க்கலாம்.''

ஃ

என்றனர். இதைச் செவியுற்ற அரசன் நன்று நன்றென அவர் திறமைக்கு மெச்சி, அவருடைய பெருமையை உள்ளவாறறியாமல் வழிமறித்து வாதாடியது அவனுடைய தப்பிதமே யென்று கூறி வேதாந்தியை வணங்கி அனுப்பிவிட்டான். பின்பு சமுசயவாதியும் நற்புத்தி வரப்பெற்றவனுய், அந்த வேதாந்தியிடத்தில் அடைக்கலம் புகுந்து, அவரையே குருவாக அடைந்து, ஞானமார்க்கத்தில் வாழ்நாட்களைக் கழித்து இறுதியில் முக்தியடைந்தான்.

## பதிலுக்குப் பதில்.

சிலர் ஒரு விஷயத்தைக் கூடயிருந்து செய்வதாகத் தெரிவித்துவிட்டுப் பிறகு அதைச் செய்யாமலே போய்விடுவதுண்டு. தான் அந்தக் காரியத்தைச் செய்துகொடுப்பதாகச் சொல்லியதை மறவாவிடினும் ஏதோ மறந்துவிட்டதுபோன்றும் காண்பித்து அந்தப் பிரஸ்தாபத்தையே எடுக்காமல் ஜாடையாக இருந்துவிடுகிறுர்கள். அத்தகையோர் பிறகு ஒருநாள் உன்னை ஒரு வேலை செய்யச்சொல்லி வேண்டும்போது, நீ ஆஹா! என்று அந்த சமயம் தலையசைத்து ஒப்புக்கொண்டு பின் அதைச் செய்யாமலே ஜாடையாகவே இருந்துவிடு. வற்புறுத்திப் பிறகு கேட்பினே இதோ செய்துவிடுகிறேன் என்று வார்த்தையை மட்டும் வெகு இனிப்பும் தாராளமுமாகக் கொட்டிவிட்டுச் சும்மா இருந்துவிடு. இது உன்னை வஞ்சிக்கவோ ஏமாற்றவோ நினைப்போருக்கு நீ தரும் பதிலாக இருக்கட்டும். பிறரது கபட ஜாலத்தையும் நீ நன்கறிந்திருப்பதாக இவ்வழியில் காட்டிக்கொள்.

# எனது கடல் யாத்திரை.



நான் என் நண்பரைக் காணவேண்டி சிங்கப்பூருக்குச் சென்ற சமயம் எனது ஸமுத்திர ஸஞ்சாரத்திற் கண்ட ஸம்பவங்களில் ரஸமான சில குறிப்புகளை இங்கு தருகிறேன். நற்சிந்தைகள் உதிக்கும்படி செய்து மனதை உல்லாஸப்படுத்தத் தக்கவை கடலின்கண் எத்தனையோ உண்டு. கண்களைக் களிப்பிக்கவும், ஆலோசிப்பதற்கு வேண்டிய விஷயங்களை யளிக்கவும் கடற் சஞ்சாரத்தில் அனந்தமான காட்சிகள் தென்படுகின்றன. ஆண்டவனுடைய படைப்பிற் சிறந்தனவாகிய கடலையும், வானையும் கப்பலிலிருந்தபடியே நாடோறும் பார்த்தவண்ணமாயிருந்தோம். எவ்வளவு பார்ப்பினும் ஆசை அதிகமாகிறதே யல்லது, பார்த்தமட்டில் போதுமென்ற திருப்தியுண்டாவதில்லை. ஆதித்தன் அடிவானில் தோன்றும்போது விண்ணெல்லாம் சுடரொளிபெற்று, பத்தரைமாற்றுத் தங்கம்போலத் தேஜோமயமாக விளங்கும். சூரியோதயமான பின்பு கிழக்கிலிருந்து சூரியன் விண்மீதெழுவதைப் பார்த்தால், பெரிதான அக்கினி கோளமொன்று கடலினின்று எழுந்து ஆகாயத்திற் செல்வதுபோலிருக்கும். சூரியாஸ்தமன வேளையும் அவ்வாறே சிறப்புற்றிருக்கும். ஒவ்வொரு வேளைகளில் மெல்லிய மேகங்கள் மேற்குத்திக்கில் திரள் திரளாய்க்கூடி விந்தையாகப் பற்பல உருவங்கொண்டிருப்பதைப் பார்த்தால், பனிக்கட்டிகள் வெள்ளை வெளேரென்று நிர்மலமாய்க் குவிந்திருப்பது போலிருக்கும். அவை இருந்தாற்போலிருந்து இந்திரஜாலம்போலச் சுடரொளி பெறுகின்றன. இப் பொன்னிறமானது வரவர அம்மேக படலத்தின்மீது முழுதும் பரவும்போது அம்மேகபடலம் சுடர்விட்டெரியும். அத்தன்மையான ஆகாயக்காட்சியின் அழகை இன்னவாறென்று வர்ணித்துக்கூற முயல்வதரிது. சமுத்திர யாத்திரைசெய்து இவ்வற்புதங்களைக் கண்டவன் எவனாயினும் நாஸ்திகனாவானோ?

ஃ

கப்பலிலுள்ள எனது அறையின் பல கணிவாயில் வழியாய்க் குனிந்து கப்பலின் கீழே பார்த்தால், அப்பொழுது நாங்கள் ஆகாயத்திற் பறப்பது போலவும், ஏதோ பெரும்பூதமான பறவையொன்று எங்களைத் தூக்கிக் கொண்டு கரைகாணாத கடலுக்கு மேல் செல்வதுபோலும் தோன்றும். கப்பலானது அலைகளின் நடுவே கடலைக் கலப்பைக்காறுபோலப் பிளந்து கொண்டு செல்வதும், அவ்வாறு கப்பல் செல்லும்போது அதன் இருபுறமும் வெண்ணுரை அபரிமிதமாய் எழுந்து, பின்னே வெண்மையான நுரை வெள்ளமொன்று திவ்வியமான ஒளியுடன் விளங்குவதும் வெகு அழ

---

ஒரு வஸ்து நன்றாக இருக்கும்பொழுதே அது எங்கு கெட்டு விடுகிறதோவென்று வெகு ஜாக்கிரதையாய்க் கவலையுடன் அதை உபயோகிப்போன் நெடுநாளைக்கும் பத்திரமாக வைத்துக் கொள்ளவும், நீண்ட நாள் உழைக்கும்படிக் காப்பாற்றிக்கொள்ளவும் சக்தி யுடையவனாக இருப்பான்.

காயிருக்கும். அவ்வெள்ளத்தின் நடுவிலே நீர்க்குமிழிகள் ராசி ராசியாய்த் தோன்றி உருக்குத் தங்கம்போலப் பிரகாசித்துக்கொண்டு மிதக்கின்றன. இது மிகவும் பளபளப்புள்ளதும், திவ்யமானதும், இப் பூலோகத்தில் காணக்கிடைக்காததுமாகி, கடற் காட்சிகளுள் மிகவும் சிறப்புற்ற காட்சியாகவுமிருக்கின்றது. அதைப் பார்ப்பவர் வைத்தகண் வாங்காமல் அதையே நெடுநேரம் வியப்புடன் உற்றுப் பார்த்துக்கொண்டு மகேந்திரஜால உலகத்தைக் கண்டதுபோலப் பிரமித்து நிற்பார்கள். இதுமட்டுமோ! அந்திப்பொழுதில் மேற்றிசையில் சூரியன் அஸ்தமிப்பதும், அதற்கெதிராகக் கீழ்திசையில் சந்திரன் அப்பொழுதுதான் உதயமாவதும், இவ்விருவின் சுடர்களையும் ஒரே காலத்திற் காண்பதும், இவற்றின கிரணங்கள் கடலின் அலைகளிற்பட்டுப் பிரகாசிப்பதும், பின் இராப்பொழுது நெருங்கியதும் ஆகாயத்தில் மப்பு மந்தாரமில்லாமல் நக்ஷத்திரங்கள் தங்களுக்குள்ள எல்லாச் சிறப்போடும் வெகு ரமணீயமாய்ப் பிரகாசிக்கத் தொடங்குவதும் பார்வைக்கு எத்தனையோ அற்புதமாயிருக்கும். ஃ

இவ்வுலகில் நாஸ்திகவாதிகளின் எண்ணிக்கை அதிகமிருக்குமென்று எனக்குத் தோற்றவில்லை. அன்னோரை ஆதரிப்போரும் சிலராகவேயிருப்பர். மானிடர் உள்ளம் அனைத்திலும், கடவுளொருவர் உண்டென்னும் எண்ணம் திட்டமாய்க் குடிகொண்டிருக்கும்படி அவர்தாமே செய்திருக்கிறார். சிருஷ்டிவர்க்கத்தில் எதைப் பார்த்தாலும் அது, "என்னைப் படைத்துக் காப்பவன் ஆண்டவன்" என்று சொல்வதுபோலக் காண்கின்றது. நான் பிரயாணம் செய்த கப்பலிலிருந்த கப்பல் தலைவன் சொல்லுகிறபடியே, கடலிலுள்ள அற்புதங்கள் சீர்தூக்கிப் பார்க்கத்தக்கவையென்றும், மற்றவைகளை விட மேலாக மனதில் பதியத்தக்கவையென்றும் நாமும் ஒப்புக்கொள்ளவே வரும். அவ்வற்புதங்களெல்லாம் மிகவும் இன்புறத்தக்கவையாம். தரையிலுள்ள பொருள்களோடு நாம் குழந்தைப் பருவ முதற்கொண்டே பழகியிருக்கிறோம்; கடலின் காட்சியோ அப்படிப்பட்டவையல்ல. அவை யாவும் புத்தம்புதியனவாகவாவது இருக்கும்; அல்லது, முன் கண்டவற்றுக்கு முற்றும் வேறாகவாவது தோன்றும். இவ்வண்ணம் கடற் காட்சியைக் காண்பதனால், அவை நம்மனதில் நன்றாய் அழுந்துவது மாத்திரமேயன்றி, கடவுள் படைப்பும், கடலில் அவர் செய்திருக்கும் அற்புதங்களும் நன்றாக நமக்கு விளங்கும். இத்தகைய அரிய கடல் யாத்திரையைக் கண்டுவந்த பேரறிஞர்களை நம் நாட்டு வைதீகர்கள் ஜாதிப்பிரஷ்டம் செய்வதென்பது பெரிய மௌடீகமேயாகும். மேலும், கடல் யாத்திரை ஸர்வ சாதாரணமாகிவிட்ட இந்நாளில் ஜாதிப்பிரஷ்ட முயற்சி எதிராறு நீந்துவதுபோலவுமாகும்.

---

ஒருவனிடமிருந்து புஸ்தகத்தை இலவசமாகப் பறித்து, அதை இன்னொருவனிடம் தாங்களே கொண்டுபோய் வலியக்காட்டி இதை நீ படி என்று அவனிடம் தந்து தொலைத்துவிட்டு வரும் புத்திசாலிகளே அதிகம். இத்தகையோர் புஸ்தகங்கள் வைத்திருப்போனையும் வைத்துக்கொள்ள விடார். தாங்களாவது புஸ்தகங்களைப் பெட்டியில் வைத்துக் காப்பாற்றுகிறார்களாவெனில் அதற்கான மூளையுமில்லை, யோக்கியதையுமில்லை. அவர்களின் பெட்டியில் எந்தப் புஸ்தகங்களுமில்லாமலேதான் கிடக்கும். ஆனால் அவர்கள் பிறரிடமிருந்து பெற்ற நூல்களோ எண்ணி முடியா.






இன்று கூடிய நமது கடையில் தாண்டவக்கோன் நகைகளை அடகுவைப்பதைப் பற்றி ஒரு பிரஸங்கம்செய்தார். "அவசரத்திற்காக நகைகளை அடகுவைத்துப் பணம் வாங்குவது எங்கும் உள்ள சங்கதி. ஆனல் பாங்கிகளில் நகைகளை வைத்துப் பணம் வாங்குவதைப்பற்றி நான் பேசவரவில்லை. எவ்வித ஆதாரவுமின்றி நம்பிக்கையின்மீது நகைகளை வைத்துப் பணம் பெறுவதைப்பற்றியே நான் சொல்லவந்தது. இதில் பெண்களின் கைப்பழக்கம் அதிகம். பெண்கள் சிறுதனம் சேர்த்துக்கொண்டு இவ்விதம் நகைகளை வாங்கி அதன்மேல் வட்டிக்குப் பணம் தருவதுண்டு. வட்டி ரூபாக்குக் காலணுவிலிருந்து அரையணுவுக்கு மேலும் எட்டிப் பார்க்கும். நகைகளை வாங்கிக்கொண்டவள் திடீரென்று கண் மூடிவிட்டால் நகைகளைக் கொடுத்தோர் பாடு எவ்வித ஆதாரவுமின்றித் திண்டாட்டத்தில் வைத்துவிடும். ஒரு பெண்ணிடம் நகையைக் கொடுத்து அடகுவைக்கும்படி அனுப்புவதில் அவள் 30-ரூபாய்க்குப் பதிலாக 40-ரூபாய் வாங்கி, 10-ரூபாயைத் தான் ரகசியமாக எடுத்துக்கொண்டு நகை தந்த பெண்ணிடம் 30-ரூபாயைக் கொடுத்துவிடுகிறள். இந்த மோசம் நகையை மீட்குங்காலத்தில் தான் வெளிக்கு வருகிறது. அந்த சமயத்தில் அந்தப் பெண்பிள்ளை மறைந்துவிடுகிறள். அவள் வாங்கிய 10-ரூபாயையும், அதற்கு வட்டியையும் கொடுத்தே நகைகளைத் திரும்பப் பெறவேண்டியிருக்கிறது. சில சமயங்களில் நகையை வைத்தவளிடம்தான் நகையைக்கொடுப்பேன்; உன்னிடம் கொடுக்கமுடியாது என்று சொல்லிவிடுவதில், அந்த மறைந்துபோன பெண்ணைத் தேடியலைய நேர்கிறது. ஒரு சமயம் அவள் கண்டுபிடிக்கப்பட்டால், என்னவோ என் அவசரத்திற்குக்கூட 10-ரூபாய் வாங்கினேன்; இப்போது நீங்கள் கொடுத்துவிட்டால் பிறகு நான் தந்துவிடுகிறேன் என்கிறள். வேறு விதியின்றி அந்த 10-ரூபாயையும் தந்து நகைகளை மீட்கவேண்டியிருக்கிறது. பிறகு அந்தப்பெண், தான் அதிகம் வாங்கிய ரூபாயைக் கொடுப்பதேயில்லை. இதோ அதோவென்று நாட்களைக் கடத்திவிடுகிறள். இது பெண்கையின் வியாபாரச் சங்கதி!

ஃ

இதில் இன்னெரு தந்திரமும் உண்டு. ஒரு பெண் ஒரு அட்டிகையை வைத்து 50-ரூபாய் வாங்கிச் செல்கிறள். பிறகு சில தினங்கள் பொறுத்து 20-ரூபாய் மதிப்பிடக்கூடிய கம்மலைக் கொண்டுவந்து அதற்கு முப்பது ரூபாய் வேண்டுமென்றும், அடுத்தவாரம் பணம்வந்துவிடுமென்றும் கெஞ்சுகிறள். நகையின் மதிப்பு போதாதென்றாலோ,

---

சங்கல்பம் செய்துகொண்டால் மாத்திரமே காரியம் முடிந்துவிடாது. காரியத்திற்கு அவசியமான சிரத்தையும் சிரமமும் வேண்டும்.

என் அட்டிகையும் பதக்கமும் 100-ரூபாய்க்குமேல் ஆகுமே; அதுவும் உங்களிடம் இருக்கும்போது, அதன் மேல் இதற்குக்கூடக் கொஞ்சம் சேர்த்துக்கொடுங்கள் என்று வேண்டுகிருள். அப்படியே அந்தப்பெண்ணும் கம்மலை வாங்கிக்கொண்டு 30-ரூபாய் கொடுத்தனுப்புகிருள். பிறகு இந்தப் பெண் ஊருக்குப்போயிருக்கும் சமயம்பார்த்து இப்பெண்ணின் குமாரனிடம் 50-ரூபாயும் வட்டியும் தந்து கலியாணத்திற்கு அட்டிகை அவசரமாக இருக்கிறதென்று சொல்ல, அவனும் தன் தாயாரின் கணக்கு புஸ்தகத்தைப் பார்த்துவிட்டு அட்டிகையின்மீது 50-ரூபாய்மட்டும் வாங்கியதென்றறிந்து 50-ரூபாயும் அதன் வட்டியும் பெற்றுக்கொண்டு அட்டிகையைக் கொடுத்துவிடுகிருன். ஊர் போன பெண் திரும்பிவந்து தன் குமாரனிடம் அட்டிகையை மீட்டுக் கொண்டு போனதையறிந்து ஏன் கொடுத்தாய் என்று தன் குமாரனைக் கண்டித்துவிட்டு, கம்மலை மீட்காமல் அட்டிகையை எப்படி நீ பெறலாம் என்று அந்தப் பெண்ணிடம் சண்டைக்குப் போகிருள். மிக்க சாமர்த்தியசாலியான அந்தப் பெண்ணே சீக்கிரம் கம்மலைத் திருப்பிக்கொள்கிறேனம்மா என்று வெகு மரியாதையாகச் சொல்லியனுப்புகிருள். பிறகு வருஷக்கணக்காகியும் அவள் கம்மலை மீட்பதேயில்லை. கேட்கப்போனுலோ "விற்றுக்கொள்ளு" என்று சொல்லிவிடுகிருள். விற்கப்போனுலோ 15-ரூபாய்க்குத்தான் போகக்கூடியதாக இருக்கிறது. கம்மலின்மீது தந்த 30-ரூபாய்க்கு வட்டியும் முதலும் சேர்ந்து 50-ரூபாயாகி விடுகிறது. இனி கோர்ட்டுக்குப் போகிறதா?—கோர்ட்டுச் செலவு—வக்கீல் பீஸ் என்னவாகும் என்று தெரு சிரிக்க அப்பெண்ணுடன் ஒரு பெரிய சண்டையிட்டு விட்டு அவ்வளவுடன் முடிக்கவேண்டியதாகி விடுகிறது. இது பெரிய படு மோசம்!

ஃ

ஒரு பெண்ணிடம் இன்னொரு பெண் தன் நகையை அடகுவைத்துப் பிறகு கஷ்டகாலத்தால் மீட்க முடியாமலே போய்விடுகிறது. வட்டியும் முதலும் சேர்ந்து பெரிய தொகையாகிவிட, அதைக் கொடுக்க சக்தியின்றி நகையை நீங்களே எடுத்துக் கொள்ளுங்கள் என்று சொல்லிவிடுகிருள். 50-ரூபாய் நகையை 25-ரூபாய்க்கு வைத்து வட்டி 20-ரூபாய் ஆகிவிட்டதில் பணம் கொடுத்தவளுக்கே நகை சொந்தமாய்விடுகிறது. நகையை வைத்துக்கொண்டு பணம் கொடுக்கும்போதே, இந்த நகை அழகாயிருக்கிறதே, இது நமது கையிலேயே சிக்கிக்கொள்ளாதா என்று ஆவற்படுகிறவர்களே முக்கால்வாசிக்கு அதிகம். இனி, அடகு நகைகளையணிந்து அது பழுதுபட்டும், கெட்டும் போய்விடில் அதனுல் நேரும் பெண் கைச் சண்டைகளும், அநர்த்தங்களும் வேறே! இதில் வீட்டுப் புருஷர்களும் பங்குபெறவேண்டி வருகிறது.

ஃ

இன்னொரு ஸம்பவத்தையும் இங்கு கூறுகிறேன். ஒருவர் காது எழுச்சி என்ற நோயினுல் மிக்க வாதைப்பட்டுக்கொண்டிருந்தார். அவரது இரண்டு செவிக்குள்ளும் மிளகுபிரமாணம் ஒரு பரு தோன்றியிருந்தது. இருகாதிலும் வேப்பெண்ணெய் ஊற்றிப் பஞ்சையடைத்துக்

---

கலங்காதே மனமே! கண்ணீரைத் துடைத்துக்கொள். சஞ்சலத்தின் பக்கம் திரும்பாதே. தைரியத்தின் பக்கமாகவே போ. உற்சாகத்தை எதிர் நோக்கிச் செல். முடிவில் வெற்றி நின்னதே.

கொண்டிருந்தார். அந்த சமயம் அவ ரது மனைவி அடுத்த தெருவு பெண் ணுக்கு இது பத்தாவது மாதம் என் றும், பிரஸவச்செலவுக்குப் பணமில் லாததால் நகை வைத்து 40-ரூபா கேட்பதாகவும் தான் தரட்டுமா என் றும் அவரை வினவினள். அவரோ அந்தப்பெண்ணின் நிலைமையை நன் கறிந்தவர். அப்பெண்ணின் கணவன் பெரிய சூதாடி. குடிகாரன். நாடகத் திலேயே வெளியூரில் இருப்பவன். இதை அறிந்தவரானதால் சிறிது யோசித்து ஒரு முடிவு செய்து கொண்டு தமது மனைவியிடம் அப் பெண்ணேயே வந்துகேட்கும்படி கூறினர். அவ்விதமே அப்பெண்ணும் வந்து இவரிடம் பேசப்போக, அதற்கு அவர் தான் இருசெவிகளிலும் பஞ் சடைத்து வைத்திருப்பதால் எதுவும் கேட்காதென்றும், ஒரு கடிதத்தில் விவரமாய் எழுதித் தரும்படியும் சொல்ல, அப்பெண்ணும் தன் கை கொலுசை வைத்துக்கொண்டு 40-ரூபா தரும்படி எழுதித் தன் பெயரை யும் கண்டு அவரிடம் தந்தாள். அவர் அதைப் படித்துவிட்டு நசுக்கிக் கீழே எறிந்துவிட்டு, தன் மனைவியிடம் பெற்றுக்கொள்ளுங்கள் என்று சொல்ல, அப்பெண்ணும் கொலுசை வைத்து 40-ரூபா பெற்றுச் சென் ருள். இவ்விதமேமறுவாரம் வேருெரு நகையின்மீது 60-ரூபாய் கேட்கவர, அப்பொழுதும் அவர் உடனே தன் இருசெவியிலும் பஞ்சையடைத்துக் கொண்டு நடிக்க, இப்பெண்ணும் கடிதத்தில் எழுதித் தர அதைப் படித்துவிட்டு நசுக்கி எறிந்து பெற் றுப்போகும்படி கூறினர். இது நடந்து 12-மாதங்கட்குப் பிறகு அப்பெண்ணின் நாயகன் வீடுவந்து சேர்ந்து, நகைகள் அடகில் இருப் பதை அறிந்து இரவல் பெற்றுப் போன நகையைத் திருப்பித் தராமல் ஏமாற்றுவதாகப் பணம் கொடுத்த பெண்ணின்மீது வழக்கு தொடர்ந்தான். முன்பு நசுக்கி எறிந் ததுபோன்ற கடிதங்களை மறுபடி எடுத்துப் பத்திரப்படுத்தியிருந்ததால், நகைகள் அடகுக்கே வைக்கப்பட்ட தென்று அக்கடிதங்களைக் கோர்ட்டில் ஆஜர் செய்யவே, கோர்ட்டாரும் நகைகள் அடகுக்கே வைக்கப்பட்ட தென்று அறிந்து முதலும் வட்டியும் செலுத்தி நகைகளைப் பெற்றுக்கொள் ளும்படி தீர்ப்பு செய்துவிட்டனர். தான் சாதாரணமாய் எழுதிய கடி தங்கள் குப்பையில் போயிருக்குமென் றெண்ணிய பெண் அவை கோர்ட் டுக்கு வரவே திகைத்துப்போய் முத லும் வட்டியும் கோர்ட்டுச் செலவும் செலுத்தும்படியானது.

ஃ

அவ்வளவு முன்யோசனையாகச் செவிகள் கேளாததுபோல் நடித்து அப்பெண்ணிடமிருந்து கடிதங்கள் பெற்றிராவிடில், தாங்கள் கொடுத்த பணத்தையும் இழந்து நகையையும் திருப்பித் தரவேண்டியதாக நேர்ந்தி ருக்கும். ஆகவே, நகை அடகு விஷ யத்தில் அதிக எச்சரிக்கை வேண்டும். இன்று சிநேகமாயுள்ளவர்களே நாளைக்கு விரோதிகளாவார்கள். இன்று எவர் உறவினரோ அவரே நாளைக்குக் கொடிய பகைவராக லாம். ஆதலின் நகை அடகின்மீது பணம் தருவோர், இன்ன நகைக்கு இவ்வளவு பணம் இவ்வளவு வட்டி

---

எவர் மீதும் துவேஷம் கொள்ள எனக்கு இப்போது நேரமில்லை. இந்த சமயம் என் வேலையைச் செய்யும் சுறுசுறுப்பில் இருக்கிறேன். என் வேலை கள் முடிந்த பிறகே அந்த துவேஷம் என்பது எப்படியிருக்குமென்று கண் டறிய முயலவேண்டும்.

யின்மேல் பெற்றிருப்பதாய் நகையை அடகு வைப்போரிடமிருந்து எழுத்து மூலம் பெற்றுக்கொள்ளவேண்டும். அவ்விதமே, நகை அடகு வைப்போரும் இன்ன நகையின்மீது இவ்வளவு தொகை கொடுத்திருப்பதாகப் பணம் தருவோரிடமிருந்து எழுத்துமூலம் வாங்கிக்கொள்ளவேண்டும். இவ்வாறு செய்யின் அதிக மோசத்திற்கு எதுவிராது. ஆனால், கணவனுக்குத் தெரியாமலே பணம் சேர்த்து அதை நகை அடகில் வட்டிக்குத்தரும் ஸ்திரீரத்தினங்களே அதிகமாதலின், அவர்களுக்கு இந்த யோசனை திருப்தி படாது; அவர்களும் ஏமாறாமலிருக்க முடியாது" என்று தாண்டவக்கோன் கூறினர். இத்துடன் நமது கடையும் நேரமானதால் பூர்த்திபெற்றது.

'பகனூர்' பொன்வண்டு செட்டியார்.

## சரித்திரப் பயிற்சி.

சரித்திரமானது அந்தந்தக் காலத்திலும் சாதியிலும் நம்போல்வாராகிய மனிதர் செய்த காரியங்களை நமக்குத் தெரிவிக்கின்றது. அதனால் ஆயிரம் வருஷங்களுக்கு முன் இருந்த அரசர்களுடையவும், பெரியோர்களுடையவும் ரகசியங்களும் அக்கால விசேஷங்களும் புலப்படுகின்றன. மற்றெல்லா சாஸ்திரங்களைப்போலவே சரித்திரமும் அதனை வாசிக்கும் வகைக்குத் தக்கபடி உபயோகப்படுகின்றது. மனிதருள் சரித்திரத்துக்கு உபயோகப்படாதவர் ஒருவருமில்லை. ஆலயங்களுக்குச் சென்றாலும் அங்கும் அது அவசியம் வேண்டுமென்றே தோன்றும். வேத சாஸ்திரங்களை நன்றாய்த் தெரிந்து கொள்ளாதவர்கள் அதிலே நின்று பிரிந்த பல பொய்யான மதங்களையும் காரணங்களையும் எப்படி அறிவார்கள்? பக்தர்களுடையவும், தேசாபிமானிகளுடையவும் சரித்திரமானது நாம் நம்முடைய ஆயுள் காலத்தை மாக்ஷிமையான உன்னத ஸ்தானத்திற்குக் கொண்டுவரக் கூடுமென்பதை நினைப்பூட்டுகின்றது. சரித்திரத்தைக்கொண்டு பயனடைய விரும்புகிறவர்களுக்கு அது மிகவும் பிரயோஜன முள்ளதாயிருக்கும். நமக்குள் சரித்திரம் எழுதிவைக்கப் படாததே நாம் அடைந்துள்ள இத்தனை இழிவுக்கும் காரணமாமென்றுணர்க. (ஆ. க. க.)

தானே அவனிடத்தில் தந்து, அவனும் கடித்துத் தின்றுகொண்டிருக்கும் கரும்பைத் திடீரென்று பிடுங்கி மற்றொருவனிடம் தந்து நீ மென்று தின்னு என்கிறான் பல்லில்லாக் கிழவனொருவன்! என் இப்படி சின்ன அற்ப புத்தியோ! சிந்தை தடுமாற்றமோ? இதனால் பல்லில்லா இவன் அடையும் பயன் என்னவோ? என்கிறார் ஒருவர்.

# பிரபா

(6-ம் வால்யம் 741-ம் பக்கத் தொடர்ச்சி.)



[முன் கதையின் சுருக்கம் :— பிரபா 'பதவுலி' சமஸ்தானத்தின் பிரபுவாகிய 'ராவ் தேவீசங்'கின் ஏக புத்திரி. அவள் தன் உத்தியான வனத்தில் யோகியான ஒரு பாடகனைக் கண்டு, அவன் பாடிய "கர்கயே நோடே நீங்கி ப்ரீதி" (சிலநாட்கள் என்னை நேசித்துச் சென்ருய்) என்ற பாடலைக் கேட்டு ஆநந்தமுறுகின்ருள். அப்பாடகன்மீதும் காதல் மனங் கொள்கின்ருள். பிறகு அப் பாடகன் அந்தப்பக்கம் வரவேயில்லை. இவளும் அவனை மறக்கவேயில்லை. இதனிடையில் அவள் தந்தை தன் உத்தேசப்படி அவளை ராஜா ஹரிச்சந்திரன் என்ற வாலிபனுக்கு மணம் செய்து கொடுத்துவிடப் பிரபாவும் தன் கணவனின் ஊராகிய நவக்கட்டம் போய்ச் சேர்ந்தாள். அங்கும் பிரபா தான் காதலித்த பாடகனை மறவாது தியானித்து நின்ருள். மணமகனான ராஜா ஹரிச்சந்திரன் பிரபாவுக்கெனத் தனி மாளிகை யமைத்துக் கொடுத்து மிகவும் நேசித்து வந்தனனாயினும், அவளைத் தீண்டி எவ்வித துன்பமும் தாராமல் அவள் மனம் போல் சுகமாகவும் ஸ்வயேச்சையாகவும் இருக்குமாறு விட்டிருந்தான். ஒருநாள் பிரபாவைத் தனது சித்திரப் படக்காட்சிச்சாலைக்கு இட்டுச்சென்று அங்குள்ள படங்களை யெல்லாம் காண்பிக்கலானன். இதுவரை சென்ற ஸஞ்சிகையில் வெளிவந்துள்ளது. இதன் தொடர்ச்சியைக் கீழே காண்க.]



பிரபா அந்த சித்திரசாலையிலிருந்த ராணு பிரதாபசிம்மனின் படத்திற்கு மூத்தமளித்துவிட்டு அதற்கருகிலிருந்த நிர்மல பிரேமம் கரை கடந்துப் பெருகும் கண்ணனின் திருவுருவப்படத்து முன் வெகுநேரம் தலைகுனிந்து நின்ருள். அக் கோபீகாந்தனுகிய கருணையங்கடலின் அழகிய திருமேனியைக் கவனித்தபோது அவள் இதயத்தில் மறைந்துகிடந்த பாடகனுகிய யோகியின் நினைவு தோன்ற, அவள் இதயம் துடித்துத் தவித்தது.

ஃ

ராஜா ஹரிச்சந்திரன் தன் காதலியை அழைத்துக்கொண்டு காட்சிச் சாலையின் மற்ருெரு பக்கம் சென்ருன். அங்கு தேச பாஷையான ஹிந்திக் கவிச்சக்கிரவர்த்திகளின் படங்கள் திகழ்ந்தன. புண்ணிய புருடனான கவி "ஸூரதாஸ்", மகா தேஜஸ் வாய்ந்த "துளசிதாஸ்", பெரும்புலவன் "கேசவர்" முதலியவர்களின் படங்கள் தலை சிறந்தவையாகும். மகாகவி ஸூரதாவிடம் பிரபாவுக்கு அளவுகடந்த பக்தி யிருந்ததால், அவள் அப்படத்தின் சமீபம் சென்று வணங்குவதற்காகத் தலை குனிந்தபோது அதனருகே இருந்த

---

தான் செய்த தப்பிதம் என்னவென்று ஆராய்கிற நிரபராதிக்கு எந்தப் பிழையும் தான் செய்ததாகத் தெரியவில்லை. ஆனல், உலகம் அவன் மீது எற்றும் பிழைகளோ வண்டி வண்டியாக.

ஓர் சிறுபடம் அவள் கருத்தைத் திடீரெனக் கவர்ந்தது. உடனே உடலில் மின்சார சக்தி ஊடுருவிப் பாய்ந்ததுபோல் அவளுக்குத் தோன்றியது. அவள் இதயம் துடித்தது; தேகம் மயிர்க்கூச்செறிந்தது. அவள் இதயத்தைக் கவர்ந்ததும், அவளது மஞ்சளைறைச் சுவரில் தீட்டப்பட்டிருந்ததுமான பாடகி யோகியின் படம் அதுவே. உள்ளத்தில் உயர்ந்தெழுந்து கலங்கிப் பெருகிய நாணம், பயம், பிரமை முதலிய பல விகாரங்களின் வசப்பட்டுவிட்ட இராஜகுமாரியால் மறுமுறை அப்படத்தைப் பார்க்கக்கூடவில்லை. பிரபா திகைப்பதைக் கண்ட ராஜா ஹரிச்சந்திரன் புன்னகையோடும் வினவினன்.

ஃ

—"நீ இந்தப்படத்தை இதற்கு முன் பார்த்ததுண்டோ?"

எதிர்பாராதவிதமாய் தன் நாயகன் வினவியதே அவள் பெருந்திகிலடைந்தாள். புலியைக்கண்ட மான் குட்டியைப்போல் திகைத்து அங்குமிங்கும் நோக்கினள். பற்பலவிதமான எண்ணங்கள் அவள் மனதில் எழுந்தன.

—"என்ன சொல்வேன்! அந்த யுவயோகியின் படத்தை எங்கே பார்த்திருக்கிறாய் என்று அவர் வினவக் காரணம் என்ன! ஈசா! என் மானத்தைக் காப்பாற்றும்!"

என்று நெடுகச் சிந்தித்தவண்ணம் பின் துணிந்து இவ்வாறு அவள் கூறினள். —"ஆம் எங்கேயோ பார்த்த ஞாபகம் இருக்கிறது."

ஹரிச்சந்திரன்:—எங்கே பார்த்தாய்?

பிரபாவுக்கு உலகமே சுழல்வதுபோல் தோன்றியது. என்ன சொல்வதென்றும் தெரியவில்லை.

—"ஒருநாள் இவர் பூங்காவின் சமீபம் பாடிக்கொண்டு சென்றபோது என் தோழி 'உமா' இவரை அழைத்துவந்து பாடும்படி வேண்டினள். அப்போதுதான் தெரியும்.

ஹரிச்சந்திரன்:—அது என்ன பாட்டு? அதைத்தான் பாடேன், கேட்போம். உன் இனிய கானமிருதத்தை நான் கேட்கக்கூடாதா?"

இவ்வினா அவளை எவ்வளவுதூரம் வருத்தியதென்று எடுத்துரைப்பது இயலாத காரியம். "என் இரகசியங்களை யாரோ இவரிடம் கூறியிருக்கிறார்கள். என் மானமும் மதிப்பும் அபவாதாக்கினியால் எரிந்து சாம்பலாக இனி அரைநிமிடமும் வேண்டியதில்லை" என்று தன்னுள் நினைத்துக்கொண்டு பிரபா கூறினள்:—

—"அவர் பாடிய பாட்டு அவ்வளவு கெட்டதல்ல."

ஹரிச்சந்திரன்:—(குலுங்க நகைத்துக்கொண்டு) நல்ல விடையிது. நல்லதோ கெட்டதோ அதைப்பற்றி எனக்கு அக்கரையில்லை. அது என்ன பாட்டு என்றுதான் நான் கேட்கிறேன்.

பிரபா:—(தன்னுள்) "இந்தக் கேள்விக்குப் பதிலளித்ததும் அவர்

---

யாவரும் கூட்டமாகவே இருந்து குலாவினும், ஒரு காரியம் ஆகவேண்டியபோது ஒருவன்கூடக் கண் முன்பு தென்படுவதில்லை. அந்த சமயம் எப்போதுமே உதவிக்கொண்டிருப்பவனே எதிர்ப்பட்டு வந்து அந்தக் காரியத்தைச் செய்து கொடுக்கிறான்.

வேறு என்ன கேட்பாரோ! என் வாழ்நாளின் இன்பம், என்மீது அவர் கொண்ட நம்பிக்கை, யாவும் இன்றோடு முடிவடைந்துவிடும்'' (வெளிப் படையாய்) அது ஸுரதாஸ் கவியின் பாடலில் ஏதோ ஒரு பதம்.

ஹரிச்சந்திரன் :—உனக்கு அது ஞாபகமில்லையா? "கர்கயே தோடே தின்கி ப்ரீதி'' என்ற கானமா?

ஃ

கண்களின் முன்பு பயங்கரமான காரிருள் சூழ்ந்ததுபோல் பிரபாவுக்குத் தோன்றியது. தலை சுழன்றது; கால்கள் தள்ளாடின; திடீரெனத் தனது சக்தியை இழந்து பூமிதேவியிடம் அடைக்கலம் புகவேண்டியவளானள். இருகையாலும் தலையைத் தாங்கிக்கொண்டு அவள் இப்படிச் சொன்னுள்.

—"ஆம், அந்தப்பாட்டுத்தான்."

பிரபாவின் இதயம் தவித்தது. அவள் தொடர்ந்து மொழிந்தாள்.

—"தங்களுக்கு அது எப்படித் தெரியும்?"

ஹரிச்சந்திரன் :—அந்த யோகி இங்கு வருவது வழக்கம். அவர் வரும்போதெல்லாம் அந்தப் பாட்டைப் பாடும்படி சொல்லி வெகு பிரியமாய்க் கேட்பேன். ஒருசமயம் அவர் சதிகுண்டத்திற்குச் சென்றிருந்ததாகவும், அங்குள்ள இராஜகுமாரிக்கு அப்பாடல் மிகு இன்பமாக யிருந்ததென்றும் அவர் என்னிடம் கூறியிருக்கிறார். அதனுல்தான் நான் கேட்டேன்.

பிரபா :—அது சுத்தப் பொய். அந்த யோகியிடம் நான் ஒரு வார்த்தைக்கூடப் பேசினதில்லையே!

ஹரிச்சந்திரன் :—அது எனக்கு ஏற்கெனவே தெரியும். அவர் தற்புகழ்ச்சி செய்வதாக அப்பொழுது உணர்ந்தேன். ஆனல் பாட்டு அவ்வளவு கெட்டதல்லவே.

பிரபா :—இல்லை. இனிமையாகவே யிருந்தது.

ஹரிச்சந்திரன் :—உனக்கு மீண்டும் அப்பாடலைக் கேட்கவேண்டுமென்ற விருப்பமிருந்தால், நான் அவரை இப்பொழுதே அழைத்து வருகிறேன்.

ஃ

பிரபாவின் முககமலம் சற்று மலர்ந்தது. ஆனல், பல, நாட்கள் எவ்வளவோ முயன்றும் மறக்க இயலாத அந்த யோகியை மீண்டும் பார்த்துத் தனது இதயத்தாபத்தை அதிகப் படுத்திக்கொள்வது சரியல்லவென நினைத்து அவள் பின்வருமாறு கூறினள் :—

—"இன்று பாட்டுக் கேட்க நான் விரும்பவில்லை. வேண்டுமானல் இனியொருநாள் பார்த்துக்கொள்வோம். எனக்கு அந்தப் பாட்டே வேண்டாம்."

—"பிரபா! நான் இன்று உன் அபிப்பிராயத்தைக் கவனிக்கமாட்

---

தானும் வேலை செய்யவேண்டும். வேலைக்காரனும் வேலை செய்யவேண்டும். வேலையாள் இல்லாதபோது தானே அந்த வேலையைச் செய்து முடிக்கவும் கற்றிருக்கவேண்டும். அப்படிச் செய்யத் தன்னல் முடிகிறதா என்று தானே ஒரு முறை செய்து பார்த்துப் பழகிக்கொள்ளவும் வேண்டும். தன் வேலையைத் தான் செய்தல் கேவலமல்ல. தன் மலத்தைத் தொட்டுத் தானே கழுவிக் கொள்ளவில்லையா?

டேன். நான் அவரை இப்பொழுதே அழைத்து வருகிறேன்''

என்று கூறிக்கொண்டே ராஜா ஹரிசந்திரன் வெளியில் சென்று மறைந்தான். அவனைத் தடுக்க அவளால் இயலவில்லை. பிரபா ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கினள்.

ஃ

சில நிமிடங்கள் சென்றன. அந்த யோகியின் இனிய ராகாதி இசையும், மனதைக்கவரும் வீணாநாதமும் ஒன்ருய்க் கலந்து ஆனந்தமயமான "கர்கயே தோடே தீன்கீ ப்ரீதி" என்ற கீதம் முழங்கிற்று. அன்று அவள் இதயத்தைக் கவர்ந்த மனோகர சத்தம் இன்று இதயத்தைத் தொளைக்கும் வஜ்ராயுதம்போல் அவளுக்குத் தோன்றியது. ஒரு கணத்திற்குள் அழகுக்களஞ்சியமாகிய அந்த யோகி அவள்முன் தோன்றினர். ஆ! அதே மதுரஸ்வரம், மனோகர நயனங்கள், கண்கவர் சுந்தரமேனி, மோஹனப் புன்னகை தவழும் முகமண்டலம். எவ்வித மாறுதலும் அவரிடம் காணப் படவில்லை. பிரபா திகிலடைந்தாளாயினும் நாணத்தோடு தன் சஞ்சலமான கடைக்கண் பார்வையை அவர் மேல் வீசினள். என்ன ஆச்சரியம்!!! அவள் இதயம் பலமாய் அடிக்க ஆரம்பித்தது. கண்கள் தாமாக மூடுவது போல் தோன்றின. காதல் வசப்பட்ட குமாரி பிரணய பாஷ்பாமிர்தம் நிறைந்த கண்களோடு தனது பிரிய காதலனது பாதகமலங்களில் உணர்வு தடுமாறி விழுந்தாள்.

**ராஜா ஹரிச்சந்திரன் அன்றே தனது காதற் போராட்டத்தில் வெற்றியடைந்தான்.**

அந்த யோகி உடனே பிரபாவை இருகைகளாலும் தழுவியெடுத்து மார்போடணைத்துக்கொண்டான். அவ்விளம் தம்பதிகளின் ஈருயிரும் ஒன்ருய்க் கலந்து உறுதியடைந்தன.

ஃ

ஹரிச்சந்திரன்:—அன்புள்ள பிரபா! உன்னை ஒரு முறையாவது பார்க்கவேண்டுமென்ற பேராசையாலேயே நான் ஒரு கபட சந்நியாசியாக சதீகுண்டத்திற்கு வந்தேன். உன் தந்தை உன்னைப் பார்க்க எனக்கு அனுமதியளிக்காததால் நான் அப்படிச் செய்யவேண்டியதாயிற்று. நானே அந்த யோகி. உன் காதலைச் சுமந்து சென்ற கள்வனும் யானே.

பிரபா:—(காதலோடு தன் கணவனை நோக்கி) "கேவலம் ஒரு யோகியின் வேடத்தில் தங்களுக்கு என்னிடமிருந்து எதைப் பெறமுடிந்ததோ, அதை ஒரு மகாராஜாவாயிருந்தும் தங்களால் பெறமுடியவில்லையல்லவா? இப்பொழுது தாங்கள் எனது கழுத்தில் மாங்கலியம் அணிந்த கணவனும், என் இதயத்தில் குடிகொண்ட நாதனுமாக இருவகையில் விளங்குகிறீர்கள். ஆனல், என் இதயம் மாசடைவதற்காகத் தாங்கள் செய்த அப்பெரும் வஞ்சகச் செயல் மறக்கத்தக்கதன்று. அதற்குரிய தண்டனையை இன்று நான் பொன் வளையல்கள் அணியப்பெற்ற இக் கரங்களால் அளிக்காமல் விடேன்''

என்று கூறித் தனது பிராணநாதனை மார்புறத்தழுவி முத்தமிட்டுத் தனது மாசற்ற காதலை வெளியிட்டாள். என்னே உண்மைக் காதலின் உயர்வு! (முற்றிற்று.)

த. சு. சங்கரலிங்கம்.

---

காதலியில்லாத பஞ்சணைச் சயனமும், மகவில்லாத வாழ்வும் ஒன்றே.

# நம்மைச் சுற்றி நிற்பவர்கள்.



பரம சாதுபோல் நம்முடன்கூடி நேசிப்பவர்கள் தங்களுக்குத் தக்க தருணமும் இடமும் அதிகாரமும் வாய்க்கப் பெறாமையாலேயே அவ்வாறு அடங்கி நடப்பவர்கள் போன்றும் தென்படுகிறார்கள். அத்தகையோருக்கு அதிகாரம் வந்துவிடினோ நம்மீதே குதிரை சவாரிசெய்யவும், நம்மை மிதித்துப் பாதாளத்தில் தள்ளவும், நமக்குப் பூரணவிரோதியாகவும் ஆரம்பித்து விடுவார்கள். நம்முடைய நடத்தை எப்பொழுதும் ஸாத்மீகமாக இருந்துவருவதைக் கொண்டு, நம்மைப்போலவே மற்றவர்களும் ஸாதுக்களாக இருப்பார்களென்றெண்ணி ஏமாறிவிடக்கூடாது. இந்தப் பூனையும் பால் குடிக்குமா என்று நாம் நினைத்தவர்கள்தான் பிறகு புலிகளாக மாறி நம்மையே வேட்டையாடவும் முற்பட்டிருக்கிறார்கள்.

ஃ

தனக்கு எவ்வித செல்வாக்கும் சுதந்திரமும் ஏற்படாதவரையில் ஒருவன் நடந்துகொள்ளும் விதம் வேறு. அப்பொழுது அவன் மிகவும் அடங்கி நடப்பவன்போலும், உண்மையான பணியாளனைப்போன்றும் காணப்படுவான். அவனுக்குச் செல்வாக்கும் அதிகாரமும் கூடிவிடும்போதோ முற்றிலும் புதுமனிதனாக மாறிவிடுகிறான். ஒரு பெண்ணின் கற்பைக் கவர நினைப்போன் அதற்கு முன்னர் அந்த நங்கைக்கு மிக்க வேண்டியவனாகவும், ஊழியனாகவும், மிகு காதல் நிறைந்தவனாகவும் காண்பித்துக்கொள்கிறான். அதில் மயங்கி அந்த சுந்தரியும் தன் கற்பை யிழந்த பிறகோ, அவளைச் சிச்சி என ஒதுக்கி நடுத்தெருவில் அலையவிடுகின்றான். ஒரு விதவையை வசப்படுத்திக்கொண்டோன் அவள் சொத்துக்கள் தனக்குக் கிடைக்குமுன் எவ்வளவோ பணிந்து நடக்கிறான். அவளுடைய ஸர்வ சொத்துக்களையும் தான் அபகரித்துக்கொண்ட பின்னரோ அந்த மூட விதவைக்கே இவன் எஜமானனாகி அதிகாரம்

---

காலமுழுதும் பிறருக்கு உழைக்கிறான். அவனுடைய அந்திய வேளையிலோ அந்தப் பிறரை அவன் அருகில் இருக்கக் காண முடிகிறதில்லை. அப்போது என்னவோ ஒரு விரோதம் வந்து பொத்துக்கொண்டு சாவுக்குங்கூடப் போகமாட்டேனென்று முறைத்துக்கொண்டு தூர இருந்து விடுகின்றனர். இவர்கள் வாராததினாலேயே சவம் அதுபோய்ச் சேரவேண்டிய இடத்துக்குப் போய்ச் சேராமற் போவதில்லை. இவர்களுக்கு காலமுற்றும் கொட்டி என்ன பயன்?

செய்யத் தலைப்பட்டுக்கொள்கிறான். தான் உத்தியோகமாக இருந்த விடத்தில் அடிக்கடி தன்னைக் கண்டு குதூகலித்துக் குலாவியவர்களே, பிறகு அந்தரங்கமாய்த் தன் எஜமானனை வசப்படுத்திக்கொண்டு தன்னை வேலையைவிட்டு விலக்கச்செய்து, அந்த வேலையில் அவர்கள் அமர்ந்துகொண்டு தனக்கு முற்றிலும் விரோதியாக மாறின சம்பவங்களைக் கண்டவர்களும் பலர் இருக்கிறார்கள். எனவே, தம்முடன் உறவோ—நேசமோ—அறிமுகமோ கொண்டு நிற்போரிடமும், தம் வீட்டிற்கு வந்து சாதாரண மனிதர்களாய்த் தங்கிக்கொள்ள முயல்வோரிடமும், தமது ஆதரிப்பில் தம்மிடமிருந்து உதவிபெற வருவோரிடமும் அதிக நம்பிக்கை கொண்டுவிடாமல், அன்னோரிடம் ஒரு சந்தேகக்கண் வைத்தே ஜாக்கிரதையாக நடந்துகொள்ளவேண்டியதா யிருக்கின்றது. எந்த சமயத்திலும் நமக்குத் துரோகம் நினைத்து நம்மை விழுங்கிவிடக் கூடியவர்களின் மத்தியிலேயே நாம் குடியிருந்து வருகிறோமென்பதையும் ஒவ்வொருநாளும் நினைத்துப் பார்த்து எச்சரிக்கை பெறவேண்டியதும் அவசியமாகின்றது.

## மனம் ஒத்திருந்தால் ஒரு வண்டியிலே!

ரயில் வருவதற்குமுன் இருவர் ஒருவரையொருவர் சந்தித்துக்கொள்கிறார்கள். "ஓ! எங்கே போகிறீர்கள்" என்று பரஸ்பரம் பேசிக்கொண்டு குலாவுகிறார்கள். இதற்குள் ரயிலும் வருகிறது. இவர் தனது மூட்டை பெட்டிகளுடன் ஒரு வண்டிக்குள் நுழைந்துவிடுகிறார் அவர் தனது பெட்டியோடு வேறொரு வண்டியில் ஏறிவிடுகிறார். அவர்களின் சம்பாஷணையும் கூட்டுறவும் அத்துடன் முடிகின்றது. இருவர் மனமும் உண்மையன்பு கொண்டு ஒத்திருக்குமாயின் இப்படி வெவ்வேறு வண்டியில் ஏறுவார்களா?—பிரிந்துபோவார்களா? இருவரும் ஒரே வண்டியில் ஏறி ஒருவருக்கொருவர் துணையாவார்களன்றோ? இவ்விதமே நெடுநாட்கட்குப் பிறகு வழியில் திடீரெனச் சந்திப்பவரை உண்மையன்பு இருப்பின் வலிய இழுத்துத் தம் வீட்டிற்கு அழைத்து உபசாரங்கள் செய்வார்கள். அந்த அன்பு அங்கு காணுவிடினோ இருவரும் நடுவழியில் பேசிவிட்டு நடுவழியிலேயே பிரிந்து அவரவர் இடம் சென்றுவிடவே நேரும். எந்த சங்கதியும் அன்பும்—அன்பு இல்லாமையையும் பொருத்தே நிகழும்.




## 3. இல்லறம்.

(6-ம் வால்யம் 721-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 248. "ஒரு உறையிலே இரண்டு கத்தியா?"

ஒரு வீட்டிற்கு எஜமானன் ஒருவனாகவே இருக்கவேண்டும். இருவர் ஏற்படின் அக்குடும்பம் ஒழுங்குபடாது. ஒரு கையே வேலைசெய்வதாயிருந்து மற்றொரு கை துணைக்கு நிற்பதாக அமைந்தால்தான் எதுவும் சரிவர நடக்கும். இவ்விதமே ஒருவன் ஒருத்தியோடு தான் வாழவேண்டுமேயன்றி இரு பெண்டிரைக் கொள்ளவொண்ணாது. அங்ஙனம் கொண்டாரின் வாழ்க்கை சிறந்து ஓங்கியதாக இன்றுவரை எந்த உதாரணமும் கிடைக்கவில்லை. ஒரு உறையிலே ஒரு கத்திதான் பொருந்தும்; இரண்டு கத்திகள் பொருந்தாது. எத்தனையோ ராஜ்யங்களை ஆளலாம், எவ்வளவோ நிர்வாகங்களை நடத்தலாம். ஆனால், மனைவி என்பவள் ஒருத்தியேதான் அமையவேண்டும். ஒரே மனைவியைக்கொண்டு வாழும் இடத்தில்கூட நாயகனுக்கும் நாயகிக்கும் மனம் பொருந்தி ஒன்றுபடுவது அபூர்வமாகிறது. இருவரும் வெவ்வேறு மனத்தினராய் மாறுகின்றனர். மனைவியும் கணவனும் மனமொத்து வாழுமிடத்தில்தான் அந்நியோன்னிய குடும்பத்தின் அழகுதோன்றும். தன் மனைவியைவிட்டு வேறு நங்கையை விரும்பியலைந்தோரின் வாழ்க்கை விருத்தி குன்றிக் கெடுகின்றது. "மனைவியுந் தானும் ஓர் நினைவாகி" உயர்நலம் காண்பதென்பது ஒருத்தியும் ஒருவனுமாக வாழும் நன்மக்கட்கே பொருந்தும்.

### 249. "சமர்த்திலே என்ன பெற்றாள், சட்டிச் சோற்றைத் தின்னப் பெற்றாள்."

சில பெண்கள் தங்களைக் கணவனைவிட மிகு சமர்த்தைகளாக நினைத்துக்கொண்டு கர்வம்மிஞ்சித் துள்ளுவர். கணவனால் எதுவும் ஆகாதென்றும், தன்னாலேயே சம்சாரம் நடப்பதாகவும், தன் சாமர்த்தியத்தாலேயே குடித்தனத்தை வெற்றியுடன் நிர்வகித்து வருவதாகவும், தனது கெட்டிக்காரத்தனம் எவருக்கும் வாராதென்றும் எண்ணிக்கொள்வர். இத்தகையோர் எந்தெந்த சங்கதியில் எந்தெந்த விதமாய் அமரிக்கையோடும் நடந்துகொண்டு போகவேண்டுமோ அவ்விதம் செய்யாமல் அந்த சங்கதியையே அலங்கோலத்தில் கொண்டுவந்து விட்டுவிடுவர். சமாதானமாய்ப் போகவேண்டிய இடத்தில் ஒரு கலகத்தை உண்டாக்குவர். தங்களின் திருவாயை அடக்கிக்கொள்ள வேண்டிய இடத்தில் திறந்துவிட்டுக்கொண்டு அதையொரு சமர்த்தாக நினைத்

---

அதிகமான நேசம் என்று நினைக்குமிடத்திலும், அதிகமான காதல் என்று எண்ணுமிடத்திலும் அவை கூடிவராமல் ஒதுங்கிப்போய்விடுவது ஏனோ?

றுப் பெருமைப்படுவர். ஒரு விஷயம் இருபக்கத்திலும் சமரஸமான முடிவுக்கு வந்துகொண்டிருக்கையில் நடுவே தங்களின் வாய்—கை—சமர்த்தைக் காட்டப் புகுந்து சமாதானத்தைக் குலைத்துவிடுவர். ஒன்றாயிருந்த குடும்பத்தை ஒன்பதாகப் பிரித்து, ஒருமித்திருந்த செல்வராசிகளைப் பாகம்பிரிக்க விட்டு, தனிக்குடித்தனமாய் வாழப்புகுந்து, வறுமையே கதியாகி அலங்கோலப்படினும், அதுவும் ஒரு சமர்த்தாகவே நினைப்பர். புருஷனோடு ஸதாகாலமும் எதிர்த்துப்பேசி அவனை யடக்கித் தாங்கள் எஜமானிகளாக உயர்ந்து நிற்பதாய்க் கொக்கரித்துக்கொள்வர். கணவனின் மனம் புண்படுகையில் தங்களின் வாழ்வு நல்லதாக அமையாது என்பதைச் சற்றும் சிந்திப்பதேயில்லை. தங்களின் கருமித்தனத்தை யதிகமாகக் காண்பித்து, அதையும் ஒரு சமர்த்தாக நினைத்துக்கொள்வதில் வீட்டிலே நடக்கவேண்டிய விவாகங்களும் நடப்பதில்லை. பருவமடைந்த பெண்கள் பல வருஷகாலம் காத்துக்கிடந்து அலங்கோலப்பட, வீட்டுக்கு மூத்தவனை பிள்ளைக்கும் கல்யாணம் கூடாமல், அவன் வீட்டுச் செல்வத்தைத் தாசி வேசிகட்குத் தொலைத்துக் கெட, குடும்பத்தில் எவ்வித அழகுமே தோன்றாமல், குடும்பமும் உயர்ந்து ஓங்குந் தன்மையதாயில்லாமல் பத்துபேர் பத்துவிதமாகப் பழித்துக் காட்டும்படி முடிகின்றது. கடைசியில் இந்த சமர்த்திகளின் வாழ்வு ஏதோ இருப்பதை ஆக்கி வயிற்றில் கொட்டி உறங்கித் தொலைவதாக ஆகிறதேயன்றி ஒரு மேலான நல்ல நிலைமையில் உன்னதப்பட வழியில்லாது போகின்றது. இத்தகையோரின் சமர்த்து இறுதியில் மூடத்தனமும், வெறும் பிடிவாதத் தன்மையுமாகவே முடிகின்றது. வருகிற செல்வத்தைக்கூடத் துடைத்துக்கொண்டு போவதாக இந்த சமர்த்து இருக்கின்றதேயன்றி வேறெந்தப் பயனையும் காணமுடியவில்லை. என்ன தரித்திர திசைக்குவந்து நாறினாலும் இந்த சமர்த்திகளின் கர்வம் அடங்கிய பாடுமில்லை. அவர்களின் கழுத்திலே எந்த நகையும் இருப்பதுமில்லை. வெறும் தாலிக் கழுத்துடனேதான் காலம் போகின்றது. சட்டிச்சோறு தின்று தொலைப்பதைத் தவிர, வேறு எந்தக் காரியத்தையும் ஒழுங்காய் முடிக்கத் தெரிவதுமில்லை. வாய் இருக்கிறது ஒருமுழம்! அதைத் தவிர வேறெந்த நல்ல சாக்கையும் காணோம். இவர்களைத் திருத்துவதற்கு ஈசனாலும் முடியாது. இத்தகையோரைப் பெண்டாகக் கொண்டோர்க்கு வேறு வினை வேண்டியதில்லை. காலமுழுதும் அவதிக் குடித்தனமாகவே தீரும். ஆனால், சிறந்த அநுபவஞானங்களை இங்கு வெகு நன்றாய்க் கற்றுக்கொள்ளக்கூடும்.

250. சம்பந்தி கிருகஸ்தன் வருகிறான். தவலையை எடுத்து உள்ளேவை.

வீட்டுக்கும் மிக்க வேண்டியவர்களாக இருப்பார்கள். நெருங்கிய உறவும் பாத்தியதையும் கொண்டவர்களாகவும் இருப்பார்கள். ஆனால், அத்துடன் அகப்பட்டதைச் சுற்றிக்கொண்டு போய்விடுவோராகவும் இருப்பார்கள். பெட்டியைமூட மறந்துவிட்டால் அதிலிருந்த விலைபெற்ற வஸ்து மாயமாய்விடும். களவுபோனதும் உடனே தெரியாது. பல நாளைக்குப்பிறகு ஞாபகம் வந்து தேடும்பொழுதுதான் அது இல்லாதது தெரியவரும். அதைப் பெட்டியில் வைத்தபிறகு யார் யார் வந்தார்கள், எவரெவர் சாமான்கள் வைக்கும் அறைக்

---

சிறு நீர் விடுகையில் சகிக்கொணாத ஒருவித கூச்சம் ஒரு வியாதிபோல் கடைசியில் தோன்றி மனிதனைக் கதறவைக்கிறதென்கிறார் ஒரு நண்பர். அது எதனால் என்று அநுபோகஸ்தர்கள் வரைந்தனுப்பின் பிரசுரிக்கலாம்.

குள் அன்று நுழைந்தார்கள் என்று யோசிக்கப்புகுந்தால், மிகவும் நெருங்கிய உறவினர்களே வந்துபோனதாகத் தெரியும். அவர்கள் அப்படிச் செய்யக் கூடியவர்களல்லவே யென்று ஒரு பக்கத்தில் நினைக்கவைக்கும். ஆனால், அவர்களைத்தவிர வேறு எவரும் வந்திருக்கவில்லை என்று திட்டமாய்த் தெரியும் போது அவர்கள்தான் அந்த சாமானை எடுத்து மறைத்திருக்கவேண்டுமென்று தோன்றுகின்றது. ஒருமுறை ஒன்றையிழந்து அதற்காகப் பெரிதும் மனம் நொந்து புண்பட்டுப் போனபிறகு, அடுத்த தடவையில் அவர்கள் வரும் போதோ அதிக முன்ஜாக்கிரதையாய்ப் பெட்டிகளைப் பூட்டிவிட்டு, சாமான்கள் இருக்கும் அறையையும் பத்திரமாய் மூடிவிட்டுக் கண்ணும் கருத்துமாய்க் காவலிருக்கத் தொடங்கிக்கொள்கிறார்கள். இவர்கள் அத்தனை எச்சரிக்கையாய் இருப்பதை அவர்களும் ஜாடையாக அறிந்துகொண்டு, அதை வெளியில் காண்பித்துக்கொள்ளாமல் சற்று விலகிய அன்னியத் தன்மையிலேயே இருந்துவிட்டுச் செல்வர். அவர்கள் இவ்விதம் விலகி நடந்துகொண்ட விதமே அவர்களைக் காட்டிக்கொடுப்பதாகி வீட்டினரை இன்னும் ஜாக்கிரதையாயிருக்கும்படிசெய்து விடுகின்றது. இத்தகையோரை உத்தேசித்தே மேற்கண்ட பழமொழி ஏற்பட்டிருக்கவேண்டும். இல்வாழ்க்கையில் எதையும் வெளியிடாமல் எவர் விரோதமுமின்றி நம்மட்டில் நாம் முன்னெச்சரிக்கையாயிருந்து சமாளித்துக்கொண்டு நல்லவர்களாக நடந்துகொண்டு போய்விடவேண்டுமென்பதையும் இந்தப் பழமொழி விளக்குவதாகக் கொள்ளலாம்.

## 251. "சமுசாரக்குட்டு வெளியிட்டால் கஷ்டம்."

இல்வாழ்வில் எத்தனையோ கவலைகள், தொல்லைகள், சோதனைகள், கண்ணீர்கள், மோசங்கள், நஷ்டங்கள், ஏக்கங்கள், துயரங்கள், சகிப்புகள் எல்லாம் குறுக்கிடுகின்றன. இவையனைத்தையும் நம் மனப்பெட்டியில் போட்டுக்கொண்டு எவ்வளவுக்கு வெளியில் விடாமல் நமக்குள்ளாகவே அடக்கிக் கொண்டு போகின்றோமோ அவ்வளவுக்கும் குடித்தனத்திலும் ஒரு மதிப்பு இருந்துவரும். நாம் என்ன விதமாய் ஜீவிக்கிறோமென்பதையே பிறர் அறியவொண்ணாதபடி மூடிவைப்பதில் வெகு நன்மையிருக்கிறது. தான் சேர்த்து வைத்துள்ள செல்வத்தையும் இவ்விதமே மறைக்கவேண்டியிருக்கிறது; தன் கடன் வகைகள் எவ்வளவோ இருப்பினும் அதற்கும் ஒரு திரைபோட்டு வைத்தால்தான் மதிப்பு கெடாதிருக்கும். தன் நஷ்டங்களையோ, கஷ்டங்களையோ தமுக்கடித்துக்கொண்டு திரிகிறவன் தன்னையே பிறர் முன்னிலையில் ஈனப்படுத்திக்கொள்கிறான். அவனே ஒரு காசுக்குக்கூட மதிப்பாரில்லாமற் போய்விடவும்கூடும். தன் சங்கதிகளைத் திறந்துவிட்ட பின்பு மறுபடியும் மூடி மறைப்பதென்பது முடியாத விஷயம்.

## 252. "சனப்பலம் இருந்தால் மனப்பலம் வரும்"

இது ஒரு அருமையான பழமொழி. எவ்வளவு செல்வம் கூடியிருந்தாலும், அதில் அத்தனை சிறப்பில்லை. உறவின் பலம் ஒவ்வொருவனுக்கும் எவ்

---

சிலருக்கு எவ்வளவோ செல்வம், வீடு, மனைவி மக்கள், வேண்டிய வருமானம் யாவும் இருந்தும் மனச்சந்தோஷமற்றுக் கிடக்கிறார்கள். ஏனோ? ஏதாவது ஒரு சங்கதியில் விசாரப்பட்டவர்களாகவே காலங்கழிக்கிறார்கள்.

வளவு அதிகமாக இருக்கிறதோ அதற்குத் தகுந்தபடியே மனதின் பலமும் அதிகரித்து எந்தக் கஷ்டத்தையும் சமாளித்துக்கொள்ள வல்லவனாவான். பஞ்சபாண்டவர்கள் தமது நாடு நகரங்களை இழந்தாலும், அவர்களுக்கு ஜனப் பலம் இருந்ததால் அவர்கள் எந்தக் கஷ்டத்தையும் சகித்துத் தாங்கவல்லவரானார்கள். ஜனப்பலம் என்பது முக்கியமாகத் தன்மீது அன்புடையோராய் விளங்கும் இரத்த சம்பந்தமுள்ளோரையே குறிப்பிட்டுக்காட்டும். தனது சகோதர சகோதரிகள், தாய் மாமன், அத்தை, பாட்டி, மனைவி, மாமன், மக்கள் இன்னும் நெருங்கியவர்கள் தன்னோடு சேர்ந்து வாழுகையில் ஒருவன் எவ்வளவோ மனோபலமும் வீரியமுமுடையவனாக இருக்கின்றான். அவர்களில் ஒருவர் மறைந்தாலும் ஒரு பெரிய பலஹீனம்வந்து சேருகின்றது. உறவினர் என்போரிற் பலர் அன்பற்று நிற்பினும் ஜனப்பலத்துக்காகவே அவர்களின் குற்றங்களை நினைக்காமல் சேர்த்துவைத்துக்கொண்டு உபசரிக்கிறோம். அதிகம் நெருங்கியவர்களில்லாதோர் வேலைக்கு ஆட்களை ஏற்படுத்தி அந்த வகையில் ஜனப்பலத்தை யுண்டாக்கிக்கொள்கிறார்கள். நண்பர்களின் கூட்டத்தாலும் ஜனப்பலம் உண்டாகின்றது. ஒண்டியாக இருந்த ஒருவனுக்கு ஒரு பெண்ணை மணமுடிப்பதும் அவனுக்கு ஒரு ஜனப்பலத்தையுண்டாக்குவதற்காகவேதான். ஜனப்பலம் இல்லாதவனுக்கே அனாதை என்பது. (தொடரும்)

## முக்கியத்தைக் கடைசியில் மகிழல்.

உடனே முக்கியமான ஒன்றை ருசி பார்த்திடாமல் பலவித ருசிகளுக்குப் பிறகு அந்த முக்கியத்தை ருசி பார்ப்பது அதிக சுவையையும் தெவிட்டிப்போகாமையையும் மிக்க மனோகாத்தையும் தரும். முதலிலேயே சாதத்தில் குழம்பையூற்றி உண்ணாமல், முதலிலே இலையில் வைத்த பக்ஷணத்தை யுண்டு, பிறகு பழத்தைப் புசித்து, அதன் பின்பு பருப்பு நெய்சாதம் கலந்து புசித்து, அப்பால் குழம்பையூற்றி உண்ணச்செய்கிற விசேஷகால போஜனாதிகள் எவ்வளவோ ஆநந்தமாயிருக்கின்றனவன்றோ? ஆதலின் முக்கியத்தைச் சுவைப்பதற்குமுன் அதைத் தொடர்ந்த பல சுவைகளைக் காணல் மிகச் சிறந்ததாம். லங்காதகனம் என்ற நாடகத்தில் முதலிலேயே அந்தக் காட்சியைக் காட்டி விடாமல், ராமர் தம் கணையாழியை அனுமாரிடம் தந்தனுப்புவதிலிருந்து ஆரம்பித்து, ராவணனதியர் வாலில் தீயிட்ட வரையில் காண்பித்து, பிறகு லங்காதனக்காட்சி நடத்தினால் அப்போதுதான் அந்த சுவைக்கு அதிக மதிப்பு ஏற்படுவதாகும். சிலர் தம் இலையில் வைத்தவற்றில் அதிக ருசியுள்ளதைக் கடைசியில் புசிப்பது வழக்கம்.




## சொந்தப்பெண் நல்லதா? தூரப்பெண் நல்லதா?



என்னுடைய மாமனாருக்கு இரண்டு பெண் குழந்தைகள். அவர் சுமார் ஐந்து வருஷமாய் தன் பெண்களையும் மனைவியையும் விட்டுவிட்டுப்போய் வேறு குடும்பமாய் வசித்துகொண்டு வருகிறார். இரண்டு வருஷத்துக்குமுன் எனக்கு விவாகம் செய்யவேண்டிய பெரிய பெண் பருவமடைந்துவிட்டபடியால் எனது தகப்பனார் சொந்தக்காரரொருவருக்கு சந்தோஷமாய் விவாகம் செய்துவைத்தார். மேற்படி பெண்ணின் தங்கையும் பெரிதாகிவிட்டபடியால் இந்தப் பெண்ணை விவாகம் செய்துகொள்ளும்படி தகப்பனார் என்னை வற்புறுத்துகிறார். தற்சமயம் ஒரு வருஷமாய் அந்தப் பெண்ணை விவாகம் செய்துகொள்ள மாட்டேனென்றுசொல்லிவிட்டேன். வேறு பெண்ணைத்தான் விவாகம் செய்துகொள்வேனென்று சொல்லிக்கொண்டுவருகிறேன். என் தகப்பனார் அவர்கள் மாமன் இல்லத்தைத் தவிர வேறுயிடத்தில் கல்யாணம் செய்தால் பல குறைவுகள் ஏற்படுமென்றும், மேலும் மாமனாரைச் சேர்ந்தோர் விவாகத்திற்கு வரமாட்டார்களென்றும் சொல்லுகிறார். நான் சொல்லுவது என்னவென்றால், எனக்கு விவாகம் செய்யவேண்டிய பெரிய பெண்ணை நமது இஷ்டம்போல் தானே வேறொருவருக்கு விவாகம் செய்து கொடுத்துவிட்டோம்; நமக்கு ஒன்றும் குறைகள் வராது; மேலும் நமக்குச் சிறியபெண் அவசியமில்லையென்று சொல்லுகிறேன். மேலும் என்னுடைய ஜாதகத்திலும் வேறு இடத்தில்தான் விவாகம் நடக்கும் என்றும், இந்த பெண்ணுக்குப் பொருத்தமில்லையென்றும் இருக்கிறது. ஆகையால் எனக்கு மனம் இசையவில்லை. எனது தாய் தகப்பனார்கள் இந்தப் பெண்ணைத்தான் விவாகம் செய்துகொள்ளவேணுமென்கிறார்கள். நான் ஜாதகப்படிதான் விவாகம் முடிக்கவேணும்; இல்லாவிடில் விவாகம் வேண்டாமென்று முடிவு செய்துவிட்டேன். ஏனென்றால், என்னுடைய ஜாதகத்திலும் வேறு பெண்தான் விவாகம் நடக்குமென்றுயிருக்கிறபடியாலும், மேலும் மாமனார் மாமியார் ஒற்றுமையில்லாமல் வெவ்வேறாய்ப் பிரிந்துயிருக்கிறபடியாலும், நான் எவ்விதத்திலும் இப்பெண்ணை விவாகம் செய்துகொள்ளப் பிடிக்கவில்லை. என்னுடைய கொள்கைப்படி வேறு பெண்தான் விவாகம் செய்யவேணுமென்கிறேன். அவர்கள் அப்படிப் பேசுகிறார்கள். இது சங்கதிகளைத் தங்கள் அமிர்த குணபோதினி

---

*மற்றவர்களைச் சிக்கச் செய்து அதைப் பார்த்து சந்தோஷப் படுகிறவன், வேறொருசமயம் தானே பிறர் வலையில் சிக்கிக்கொண்டு தன்னை மற்றவர்கள் நோக்கிப் பரிகசிக்கும் நிலைமையை அடைகிறான்.*

பத்திரிகையில் பிரசுரித்து, இன்ன விதமாய்ச் செய்யவேண்டுமென்பதையும் தெரியப்படுத்துமாறு கேட்டுக் கொள்கிறேன். K. R. V.

ஃ

[பத்திரிகைக்கு வரையும் விஷயங்கள் கூட்டெழுத்தில், இருபக்கமும் எழுதப்பட்டிருப்பின் அவை பிரசுரிக்கப்படமாட்டா வென்பதை அன்பர் கவனிப்பாராக. தமது சொந்தத்திலுள்ள மாமனாரின் பெண்ணை மணக்க இவர் மறுக்கிறார். இவரது பெற்றோர்களோ பூர்வசொந்தம் விட்டுப்போகவொண்ணாதென்ற உத்தம சிந்தையுடன் அப்பெண்ணையே விவாகம் செய்துகொள்ள வற்புறுத்துகின்றனர். நாம் பெற்றோரின் சார்பாகவே தான் பேசவேண்டி யிருக்கின்றது. சொந்தத்திலுள்ள பெண் எப்பொழுதும் சொந்தமாகவே யிருந்து வீட்டிலுள்ள அனைவருக்கும் பிரியமாக நடந்து கொள்வாள். குடும்பத்திலுள்ள அனைவரும் அந்தப் பெண்ணுக்கு விவாகத்தின் மூலமாக அல்லாமல், விவாகத்திற்கு முன்பே மிக்க வேண்டியவர்களாகவும் நெருங்கிய பந்துக்களாகவும் இருப்பதால், எவர் மீதும் அப்பெண்ணுக்கு அன்பு குறைவதற்கு இடமில்லை. எவரையும் அன்னியராக நினைப்பதற்குமில்லை. தன் கணவனுக்கு எவர் மிக்கவேண்டியவர்களோ, அவர்களே தனக்கும் வேண்டியவர்களாக இருப்பதால் பேத எண்ணம் கொள்ளவும், குடும்பத்தில் புதிய கலகங்கள், கோரணிகள், பிரிவினைகள் தோன்றவும் சற்றும் இடமேயில்லை. சொந்தப்பெண் கோபித்து ஒரு வார்த்தை சொல்லினும், குடும்பத்திலுள்ளோருக்கு அது ஒரு குற்றச் சொல்லாகப் படாது. இன்று மனஸ்தாபம் வரினும் நாளைகூடிக்கொண்டு சாதாரணமாகி விடலாம். இந்தப் பெரிய நன்மையை உத்தேசித்து அநுபவஸ்தர்களும் பெரியோர்களுமான பெற்றோர்கள் சொந்தத்திலுள்ள மாமனாரின் பெண்ணையே மணக்கும்படி நன்மனத்தோடும் வற்புறுத்துகிறார்களென்பதை நமது அன்பர் அறியவேண்டும்.

ஃ

தூரத்துப் பெண் நல்ல பெண்ணாக அமைவது ஆயிரத்தில் ஒன்றாகவே சொல்லும்படி நேருகிறது. தூரத்துப் பெண்ணுக்குக் குடும்பத்திலுள்ளோரனைவரும் அன்னியர் போலவே காணப்படுகிறார்கள். குடும்பத்திலுள்ளோரும் அவளை அன்னியப் பெண்ணாகவே அடிக்கடி எண்ணும்படி பல விகற்பங்கள் நேரிடுகின்றன. தூரத்துப் பெண்கள் குடும்பத்தை விட்டுப் பிரிந்து தன் கணவனோடு தனிக்குடித்தனமாய் வாழப் பார்ப்பதில் விசேஷித்த விருப்ப முள்ளவர்களாதலின் குடும்பப் பிரிவினையும் ஸம்பவிக்கின்றது. இன்னும் பல கலகங்களும் உற்பத்தியாகின்றன. தூரத்துப் பெண்ணின் பெற்றோர்கள் தங்கள் மருமகனைத் தனியே பிரிந்து வாழும்படியும், வீடு நிறைய மனிதர்களை வைத்துக்கொண்டு அவர்களுக்கெல்லாம் ஏன் ஆக்கிக் கொட்ட வேண்டுமென்றும், அந்தச் செலவு மிச்சமானால் ஏதாவது நகைகள் செய்துபோட உதவுமே யென்றும் தூண்டிக் கொடுக்கிறார்கள். இந்த உபதேசம் மருமகனுக்கு வெகு தித்

---

ஒரு மனிதன் ஒரு சமயத்தில் அநேகர் தன்னைச் சூழ்ந்துநிற்கக் காணப்படுகிறான். மற்றொரு சமயத்திலோ எவருமே யில்லாத ஒண்டி மனிதனாகவும் கிடக்கிறான். அபாயம் நேர்வதும் சௌகரியத்தாழ்வு உண்டாவதும் அந்த ஒண்டி நேரத்திலேயே.

திப்பாகவும் நியாயமாகவும் படுகிறது. உடனே தன் பெற்றோர்களைச் சேர்ந்தோரின் மீது அதிருப்தியான எண்ணங்களைக் கொள்கிறான். இதனிடையே தூரத்துப் பெண்ணின் தாய் தந்தையர் உறவினர் மருமகப் பிள்ளையின் வீட்டிற்கு வருகின்றனர். அப்போது ஏதோ கலகம் நேரிட, அதில் வந்த விருந்தினர்களைச் சரிவர உபசரிக்காமற் போய்விட, இதிலிருந்தும் ஒரு மனஸ்தாபம் முளைக்கின்றது. தன் மாமி மாமனார்களைத் தன் பெற்றோர் நன்கு கவனித்து நடத்தவில்லையென்று புது மாப்பிள்ளை சீறி விழுகிறார். மாப்பிள்ளையின் பெற்றோர்களோ—உனக்கு உன் மாமன் மாமி தான் உயர்வாகத் தோன்றுகிறதே தவிர, எங்களை நீ லக்ஷியம் செய்கிறாயா?—அவர்களின் பக்கத்து மனுஷ்யனாகத்தானேபோய் விட்டாய் என்று ஆத்திரமாய்ப் பேசிக் கண்ணீர் விடுகிறார்கள். சந்தோஷத்திற்கு தூரத்துப் பெண்ணை விவாகம் செய்து கொள்ளப்போய் சச்சரவிலும் ஸஞ்சலத்திலும் முடிகிறது. இதில் ஒரு குடும்பமாயிருந்த வீடு எட்டுக் குடும்பமாய்ச் சிதறிச் சின்னா பின்னமாகிறது. இப்படி எத்தனையோ இடங்களில் ஆகியும் இருக்கிறது.

ஃ

இவ்வளவோடு போகவில்லை. தூரத்துப்பெண் பேசும் ஒவ்வொரு ஜாடைவார்த்தையும் குடும்பத்திலுள்ளோருக்கு ஒவ்வொரு அம்பு போற்பட்டு அவர்களின் நெஞ்சைப் புண்ணாக்குகிறது. அவள் தன்னை மாமி நாத்திகள் வெகுபாடு படுத்துகிறார்களென்று நித்தமும் கணவனிடம் தலையணை மந்திரம் ஓதுகிறாள். பிரிந்து போகவே முயல்கிறாள். தாங்கள் வெறுத்த பெண்ணிடத்துக் குடும்பத்திலுள்ளளோர் கொடுமையுடன் நடப்பதும் சகஜமே. சொந்த இடத்திலேயே பெண்ணைக் கொண்டால் இவ்வளவு விபரீதங்கட்கு இடனிராது. இதனால் தூரத்துப் பெண் கூடாதென்றில்லை. தூரத்துப் பெண்ணிலும் பலர் குணசாலிகளாக இருந்திருக்கிறார்கள். சொந்த இடத்துப் பெண்களிலும் பலர் கொடியவர்களாயிருந்துள்ளார். மூத்த பெண்ணைக் கொடுத்த இடத்தில் அவள் காலமாகி விட, அவளுடைய குழந்தைகட்கு ஒரு நல்ல ஆதரவாயிருக்குமென்று அவளுடைய தங்கையைத் தரப்போனால், இத்தங்கை, தான் மாற்றாந்தாயானதும் தன் தமக்கையின் குழந்தைகளைக் கொடுமைப்படுத்துபவளாக மாறி விடுவதையும் பார்த்திருக்கிறோம். என்றாலும், சொந்தப் பெண் அமைவதுபோல் தூரத்துப் பெண் அவ்வளவாகப் பொருந்துவதில்லை யென்பதே வேத ஜனவாக்கியம். பொருந்துவது அவரவர் அதிர்ஷ்டத்தைப் பொருத்தது. தாரமும் குருவும் தலை விதிபோல் அமைவதாதலின், அதற்குத் தக்கபடியே தான் புத்தியும் போகும். ஜாதகத்தை முழுதுமே நம்பி விடுவதற்கில்லை. ஜாதகம் கணிக்கும்போது எந்தக் கடியாரத்தின் நேரப்படி கணிக்கப்பட்டதோ யார் கண்டார்? நூறு கடியாரங்களும் நூறு விதமாக நேரத்தை

---

பெண்டாட்டியின் சொல்:—"எல்லாம் நீங்கள் செல்வம் கொடுக்கிறதிலே தான் குட்டிச்சுவராப் போரது. கொழந்தையாம்; உங்களுக்கு என்ன; நீங்கள் சொல்லுவேள் எல்லாம்! இப்படி ஒண்ணும் தெரியாமே பொண் புக்காத்துக்குப்போய் நின்னா உங்களைச் சொல்லுவாளோ?—என்னைச் சொல்லுவாளோ?"

வேறுபடுத்திக் காட்டுவதால் ஜாதகக் கணிதம் சரியாக அமைவது அருமை. கடைசியாக, தான்கொள்ளப்போகும் பெண் தன் வீட்டாருக்கும் திருப்தியாயிருக்கிறதா என்று கவனித்துச் செய்தாலன்றி, பிறகு அப்பெண்ணோடு தன் வீட்டிலிருந்து வாழ முடியாது. தன்னவர்களுக்குப் பிடிக்காத இடத்தில் விவாகம் செய்துகொண்ட ஒரு பிரபல நூலாசிரியர் பிறகு எல்லோரும் தன்னைத் தூற்றுவதைக் கண்டு வருந்தித் தற்கொலை செய்துகொண்டுவிட்டார். ஆகவே, பெற்றோரின் அபிப்பிராயப்படி சொந்தத்திலுள்ள பாக்கியத்தையே அனுபவிப்பது தான் உத்தமமென்று நமக்குத் தோன்றுகின்றது. எதுவும் சொந்தமாய்ப் பட்ட பிறகேதான் தெரியவரும். அதற்கு முன்னதாக எவ்வளவு விவரித்துச் சொன்னாலும் அறிதல் கஷ்டமே. ப-ர்.]

## நாணுதலின் பொருள் யாதோ ?

தன் நண்பனுக்கோ உறவினனுக்கோ ஒரு நன் மனைவி வாய்க்கவேண்டுமென்று கோபாலன் வெகு நாட்களாகக் கோரிநிற்கின்றான். பிறகு விவாகமும் நடந்து வீட்டிற்கு வந்த நங்கையோ கோபாலனை ஒரு அன்னியன் தானே என்று அலக்ஷியம் செய்கிறாள். கோபாலனின் நண்பனும் புதிய உருவில் மாறி அவனை அன்னியனாகவே நினைத்து வெளிக்குமட்டில் உபசாரப் பேச்சுகள் வழங்குகிறான். கோபாலனைக் கண்டதும் மிக்க நாணியவள்போல் புதிய சுந்தரி மறைந்துகொள்கிறாள். கோபாலனுக்கு அன்னம் பரிமாற வேலைக்காரி வருகிறாள். கோபாலன் நெடுகச் சிந்திக்கின்றான். தன்னை நெருங்கியவனாக நினைத்தால் நண்பனின் மனைவியே சாதம் வட்டித்திருக்கமாட்டாளா என்று எண்ணுகிறான். நண்பனின் மனைவியோ இந்த அன்னியனுக்குத் தான் ஏன் அன்னமிட்டுபசரிக்க என்று எண்ணி, நாணத்தால் அவன்முன் வாராததுபோல் நடித்துக் காண்பிக்கிறாள். மற்றொரு சமயம் கோபாலன் தன் நண்பனைத் தேடிப்போக, இவனைக் கண்டதும் அவன் மனைவி நாணியவள்போல் மறைந்துகொள்ள, இவனும் மௌனமாய்த் திரும்பிவிடுகிறான்! ஒருவனை வீட்டுவழி வாராதிருக்கச் செய்வதற்கு வீட்டின் அரசி நாணுதலும் ஒருநல்ல தந்திரமாகவே முடிகிறது!

*தான் தேடும்வஸ்து எங்கேயோ கிடக்கிறதென்று தன் மனதில் ஒரு தீர்மானம் ஏற்பட்டுவிட்டால், அந்த வஸ்து தற்செயலாகத் தன் மேஜைமீதே தன் கண்ணெதிரில்தானே காணப்பட்டாலும் அது தன் கண்பார்வைக்குத் தென்படுகிறதேயில்லை.*

# வஞ்ச நெஞ்சப் பேயர்.

“ஆயிரஞ்சொன்னாலு மறியாத வஞ்சநெஞ்சப்
பேயரோடுகூடிற் பிழைகாண் பராபரமே.”





“உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவா ருறவு கலவாமை வேண்டும்.” தெய்வந் தொழுதல் முதலிய நன்னடையாதிய எந்தக் காரியத்தையும் வஞ்சநடையினருக்குப் போதிப்பதினாலும், அவரை நமது தோழராகக்கொண்டு நாம் ஒழுகுவதானும் நமக்குக் கேடேயன்றி, நமக்கு நாம் கருதிய நன்மை அவர் நட்பாலுண்டாகாது. ஏனெனின், அவர் நெஞ்சம் வஞ்ச நெஞ்சமாதலின் என்க.

“வாள்போற் பகைவரை யஞ்சற்க வஞ்சுக,
கேள்போற் பகைவர் தொடர்பு”

என்றார் நந்திருவள்ளுவனார். அதாவது வெட்டவெளிச்சமாக நமக்கு விரோதியாய் எவரேனும் இருப்பார்களானால், அவர்கட்காக நாம் ஒருபோதும் அஞ்சவேண்டியதே யில்லை. பின் எந்தப் பகைவருக்கோ நாம் அஞ்சவேண்டியதெனின், பார்வைக்கு அதிகப் பிரியமான சிநேகிதரைப்போல நடித்து அந்தரங்கத்திற் பகைபாராட்டி நிற்குமவர்களைக் குறித்துத்தான் ஒவ்வொருவரும் நடுங்கவேண்டும்; எச்சரிக்கையாதலும் வேண்டும். ஏனெனில், அக்கபட நண்பர்களுடைய சிநேகமானது ஒருகாலத்தில் நமக்கு மஹத்தான கெடுதியைத் தரும். அவ்வாறெவர்க்கேனும் கெடுதி விளைந்திருக்கின்றதா என்று ஆலோசிப்போமானால் விளைந்துள்ளதாகவே ஞாபகத்திற்குப் பலபல வருகின்றன. அந்த ஞாபகத்தில் ஒன்றினைச் சற்று இங்கு விசாலமாக விவரிப்போம்.

“மீதெழும் மோக்கு யென்ன வாழ்க்கையை விடுவதல்லால்
சீதையை விடுவதுண்டோ?—இருபது திண்தோள் உண்டா?”

ஜலத்தின்மீது எழுகின்ற குமிழ்களையொத்த இந்த நிலையற்ற வாழ்க்கைகொண்ட என் சரீரத்தை விடுவேனேயல்லாமல், நான் சீதையை விடுவதும் உண்டா? அப்படி விடுவேனாயின் எனக்கு இருபது தோள்கள் இருந்து என்ன பிரயோஜனம்?—என்று விடாப்பிடியாய்க் கூறிய இராவணனை யறியாதார் யார்? எல்லோராலும் அறியப்பெற்ற கீர்த்திமானாகிய இராவணனே ஒருகாலத்தில் கபட சிநேகிதனால் வெகு கஷ்டத்தினை யடைந்தனன்.

ஃ

---

உண்மையிலுள்ள பாத்தியதையை மறைத்து விட்டுத் தங்களின் வாய் சாமர்த்தியத்தாலேயே ஏமாற்றிவிடப் பார்க்கிற சங்கதி வெகு பேரிடமிருக்கின்றது.

இலங்காதிபன் தனது ஜீவிய காலத்தில் தன்னைப்போலப் பாக்கிய சாலிகள் எவருமில்லை யென்ற செருக்கு மிகவும் உடையவன். அதில் மயங்கி யுள்ள அவன் வாழும் மாளிகைக்கு ஒருநாள் உச்சிப்போதில் மின்னலையொத்த சடையினரும், தூய்மையான தமது உள்ளம்போன்ற வெள்ளிய உடையின ரும், சாந்தமான நடையினரும் ஆகிய ஒரு பெரியவர் ஆகாயமார்க்கமாக வந்து நின்றனர். வந்துநின்றவரோ மகாநுபாவரென்று மூன்றுலகவாசிகளுங் கரங்கூப்பித் தொழும் கருணையினால் நனையப்பட்ட உள்ளத்தினையுடையவர். இத்தகைய மஹானை இவனுமறிவான். அறிந்திருந்தும் எழுந்திராமலும், அஞ்சலி செய்யாமலும் "ஹே நாரதனே! நன்றாக விருக்கின்றனையா? எங்கு வந்தனை? நினக்கு என்ன வேண்டும்? இப்படி இரு" என்று தன் காலின் அருகே கிடந்த ஒரு பலகையைத் தானே இடதுகாலினால் தள்ளி இதில் உட்கார் என்றான். இவனதிச் செயல்களையும், வசனங்களையுங் கண்டும் கேட்டும் நாரதர் வியப்பெய்தினர். இவனை இறுமாப்பு என்னுஞ் செல்வச் செருக்கு பிடித்திருக்கின்றது; என்னைக்கண்டு இவன் எழுந்து கரங்கூப்பி வணங்காமலும், தகுந்த ஆசனமளிக்காமலும் "ஹே நாரதா" என்றானே! இனி இவனிடத்தில் நாம் உண்மையாக நடந்துகொள்ளக்கூடாது; என்று சிந்தித்துக்கொண்டு, சரி, நாம் போகலாமா என்று கருதினர்க்கு,

ஃ

"பகையாளி குடியை உறவாடிக் கெடுத்தான்" என்னும் உலகினரின் வாய்மொழி நினைவிற்கு வந்தது. வரவே, உள்ளேயிருந்த சீற்றத்தினையும் தனது ஏற்றத்தினையும் மறந்து, இரு கரங்களையும் மேலே தூக்கி இலங்காதி பனே! உனக்கு மங்களம் பெருகுக என்று ஆசீர்வதித்து, உயர்ந்த ஆசனத்தி லிருக்கின்ற அவனெதிரே அவன் காலால் தள்ளிய சிறு பலகையிலிருந்து சகதீசுவரனாகிய உம்மைப்போலத் திரிலோகங்களிலும் எல்லாவித உயர்வுகளை யும் பெற்றவர்களும் வன்மையாளரும் எவருமில்லை யென்று உறுதியாக உரைப் பேன் என்றனர். இவர் உரைத்த இம்மொழியைக் கேட்டும் கேளாதவனைப் போல வேறு காரியங்களிற் சிறிதுநாழிகை மனஞ்செலுத்தினவனாகவிருந்து, பின்னர், சரிதான் என்று தலையசைத்து, இன்னம் என்ன விசேஷம்?" என் றான். விசேஷமொன்றுமில்லை என்றார் நாரதர்.

இராவணன்:—ஓய் ரிஷியே! நீர் சுவர்க்கத்திற்குப் போகிறதுண்டா?

நாரதர்:—மஹாப்பிரபு! நான் சுவர்க்கத்திற்குப் போகாதநாளே இராது.

இராவணன்:—அங்கு யாரைப் பெரிதும் புகழ்கின்றார்கள்?

நாரதர்:—எந்த விஷயத்திலோ?

இராவணன்:—எல்லா விஷயத்திலேயுந்தான்.

ஃ

இதைக்கேட்ட நாரதர் தன்னுள் சிறிது சிந்தித்தார். ஓ! ஓ! இவ னிடத்திலே எவ்வளவு நன்மைகளிருக்கின்றனவோ, அவ்வளவிற்கு இரட்டிப்

---

"தெரியாத விஷயத்தை வியாக்கியானம் செய்து விளக்கச் சொன்னால் நானென் செய்வேன்?"

பான நிமைகளும் இருக்கின்றன. மற்றெவரிடத்திலும் இவ்வண்ணம் இராது. நமக்கு எவரேனும் இதுகாறும் பீடத்தினைக் காலாற்றள்ளி யிட்டார்களோ; இவன்தானே அப்படிச் செய்தான். இந்த மாதிரியான குணம் பிறரெவருக்கு மில்லை. சரிதான் இவன் கேட்பது என்று தன் மனதிற்குள் நினைத்துக் கொண்டு கபடமாகப் பேசவேண்டுமென்ற முடிவுக்கு வந்தார்.

நாரதர் :—இலங்காதிபரே? எல்லா விஷயங்களிலும் சிறந்தவராகத் தங்களைத்தான் புகழ்கின்றனர்.

இராவணன் :—பாதாளத்திலும் அப்படித்தானே?

நாரதர் :—அங்கும் தங்களின் கீர்த்திப்பிரதாபமே வீசுகின்றது.

இராவணன் :—சரி, பூலோகத்திலேயோ?

நாரதர் :—அது எனக்கு அவ்வளவாகத் தெரியாது. இன்னமொருமுறை இங்கு வருகிற பொழுதானல் அந்த உண்மையைக் கூறுவேன். இப்போது நான் உறுதியாக உரைக்கமாட்டேன். தங்கள் கிருபை இருக்கில் மற்ெருரு தாம் இங்கு வரும்பொழுது தெரிவிக்கிறேன்

என்று கூறிப்போய்விட்டனர். திரும்பிய நாரதர், "இவன் நம்மை அவமதித்தானே; இனி இவனை நாம் வஞ்சக சிநேகனாகத்தான் கெடுத்து அடக்கவேண்டும்" என்று தீர்மானம் செய்துகொண்டு, மறுதினமே இலங்காதிபனுடைய அரண்மனைக்குச் சென்று அவனைக் கண்டு, அவன் அலட்சியமாக இருத்தலை யெண்ணுமல் எதிர்வந்து ஆசிகூறினர். உடனே இராவணன்,

ஃ

"வேண்டுமென்று தின்றல் வேம்புங் கரும்பாகும்" என்பதற்கிணங்க, நேற்று அருவருப்புடன் உபசரித்த நாரதருக்கு இன்று பிரீதியுடன் ஆசனமளிக்கச்செய்து தானும் இருந்து "என்ன சமாசாரம்" என்ருன். நாரதர், பூலோகத்தின் எந்தப் பாகத்திலேயும் தங்கள் பிரக்யாதியேயன்றி வேறில்லை என்பதை யறிந்தேன்; அதனை யுரைக்கவே வந்தேன் என்றனர்.

ஃ

தற்புகழ்ச்சியிலேயே விருப்பமுள்ள இலங்கையர்கோன் இம்முதியவர் மொழிகளைக் கபடமானதாக எண்ணுமல், வெகு சத்தியமானதாகவே கருதி மிகு ஸந்தோஷமடைந்து நாரதரைப் புகழ்ந்தான். "என்னைப்பற்றிய விசேஷங்கள் எவையேனும் இருந்தால் உடனே என் காதிற்கு அவைகளை எட்டவையாதிருக்கமாட்டீர்கள் என்று எண்ணுகின்றேன்; அடிக்கடி வரவேண்டும்" என்று கூறி விடைகொடுத்தனுப்பினன். உடனே நாரதர் வெளியேறி, "இவனை நாம் எளிதில் இனி ஏமாற்றிவிடலாம். இவன் நமது வஞ்சக நட்பினை

---

நித்திரையிலும்கூட ஒரு கண் அங்கினபடியும், ஒரு கண் விழித்தபடியும் பெண்கள் இருக்கவேண்டுமாம். எந்த நேரத்தில் எவர்களால் தனக்கு ஆபத்தோ?—யார் கண்டார்? வெளிப்பார்வையில் எல்லாரும் வேண்டியவர்கள்தான். எவர் உள்ளம் கோணலோ யாருக்குத் தெரியும்?

யுணர்மாட்டான். நமது கபட அபிநயங்களை உண்மையானவை யென்று கருதிவிட்டான். இவனது சிநேகம் கெடாதிருத்தற்கு இவனிடத்திற்கு நாம் அடிக்கடிப்போகவேண்டும். போகாதுபோனால் சிநேகம் கெட்டுவிடும். அரசன் துர்க்குணமுடைய மந்திரியினாலும், ஸன்யாஸியானவன் பிறரோடு கூடுவதனாலும், ஸ்திரீ போகத்தாலும், புத்திரன் அதிகமாகச் செய்யும் சீராட்டினாலும், பிராமணன் வேதம் ஓதாமையாலும், வமிஸம் கெட்ட நடையுடைய சந்ததியாலும், நல்லொழுக்கம் துன்மார்க்கனின் சேர்க்கையாலும், வெட்கம் கட்குடிப் பதினாலும், பயிர் பார்வைக்குறைவாலும், பந்தத்துவம் கலகத்தாலும், செல்வ விருத்தி அந்யாயத்தாலும், பணம் முதலிய தனங்கள் ஆலோசனையின்றிச் செய்யும் செலவு முதலியவைகளாலும், சிநேகம் அடிக்கடி பாராமைக்கேதுவான தூரதேசவாசத்தாலும் கெடும் என்பதுபோல, இவனுடன் நெருங்கிப் பழகாமற்போனால் இவன் நட்பு நிலைக்காது'' என்று தீர்மானித்துக்கொண்டு,

ஃ

"மதியாதான் வாசலை மிதியாதே'' என்பதற்கு மாறாய் அடிக்கடி இலங்கைக்குப் போதலும் வருதலுமாக இருந்தனர். ஒருநாள் இவரை நோக்கி, "இப்பொழுது நம்முடைய பிரக்யாதி எப்படி யிருக்கிறது?'' என்று கேட்டான். உடனே நாரதர் "தங்களைத் தேவர்களும் மனிதர்களும் நாகர்களும் ஆகிய இவர்களெல்லாம் உண்மையாகவே புகழ்கின்றார்கள். ஆனால், ஒரு சங்கதி சொல்வதற்கு எனக்கே வெட்கமாக இருக்கின்றது. அதனைத் தங்களிடம் எப்படி யுரைப்பேன்'' என்றார். இராவணன், "நாரதரே! நானும் நீரும் முன்னே அதிக சிநேகமில்லா திருந்தோம்; இப்பொழுதோ நகமுஞ் சதையும்போல இருக்கின்றோம்; ஆதலால் நீர் எந்த விஷயத்தை யுரைத்தாலும் நான் அருவருப்படையமாட்டேன்; என்ன சமாசாரம்; சொல்லும்'' என்று கட்டாயப்படுத்தினான். இதுதான் சமயமென்று நாரதர், "சொல்லச் சொன்னமையாற் சொல்லுகிறேன்; என்மீது குற்றமில்லை'' என்று பீடிகை போட்டுக்கொண்டு, "பூலோகத்திலே கிஷ்கிந்தை என்னும் இடத்திலே ஒரு பெருங் குரங்கு இருக்கிறது; அது தங்களைச் சற்றும் மதிக்கிறதே யில்லை; ஒருகாலத்தில் அக்குரங்கு தங்களைக்குறித்து, "இலங்கையிலே ஒரு பத்துதலைப் பூச்சி கிடக்கிறது'' என்று வெகு துச்சமாக இகழ்ந்தது; இதனைக் காட்டிலும் இன்னும் என்ன அவமானமாகப் பேசவேண்டும்; இந்த ஒரு குரங்கைத் தவிர, மற்றெவரும் தங்களைத் தாழ்த்திக் கூறியதனை நான் கேட்டதேயில்லை'' என்று கூறினர்.

ஃ

"ஆட்டிவிட்டால் ஆடாதார் யாரே'' என்பதுபோல, நாரதரால் தூண்டிவிடப்பெற்ற இலங்காதிபன் இவரது வஞ்சமொழியை மெய்ம்மொழியென்றே கருதி, சேனாதிபதியை யழைத்துச் சேனைகளைக் கிஷ்கிந்தையை நோக்கிச் சண்டைக்குச் செல்லும்வண்ணம் ஆக்கியாபித்தான். உடனே, நாரதர் நகைத்துக்கொண்டு, "குரங்கின் கொட்டத்தை யடக்குதற்குச் சேனைகளோடு போனால் தங்களை உலகினர் என்னென்று மதிப்பார்கள்? தாங்கள் மாத்திரம்

---

கலவரத்துடன் ஒரு காரியத்தைப்பற்றி ஆலோசனை செய்தால் நன்மை பயக்காது.

போய் அதனைப்பிடித்து இங்கே கொண்டுவந்து விடுவதே நல''மென்று கூறி னார். அதனை இலங்கைமன்னன் யதார்த்தமாக நம்பிச் சேனைகளோடு போதலை நிறுத்தி, அப்பொழுதே நாரதருடன் அந்தரமார்க்கமாக வாலி யிருக்கும் இடத்தையடைந்து பார்த்தான். மலைபோன்ற சரீரியான வாலியையக்குறித்து இக்குரங்கினை நாம் எப்படிப் பிடிப்பது என்று நினைத்துக்கொண்டு நாரதரைப் பார்த்தான். நாரதர், "ஏன் விழிக்கின்றீர்? இந்தக் குரங்கு பார்வைக்கு இப் படித்தான் இருக்கும்; இது தூங்குகிறதோ, அல்லது செபஞ்செய்கிறதோ, நான் எதிரிலிருந்து ஜாடை செய்கிறேன்; அந்தப் பிரகாரமே செய்யும்'' என்று வாலியின் எதிரிற் சென்று கண்ஜாடை செய்துவிட்டு, இராவணனின் அரு கில் வந்து "நீ அதன் வாலைப் பிடித்துத் தூக்கு'' என்றனர். அவன் அவ்வாறே வாலியின் வாலைப் பிடித்துத் தூக்கினான். உடனே வாலி தன் வாலைச் சுழற்றி இவனை வாலுக்குள்ளாகச் செய்து உருட்டி முடிச்சிட்டுக்கொண் டான். தனது வலிமையையெல்லாம் இழந்த இராவணன் மனது நொந்து புண்பட்டவனாய் என்செய்வது என்றான். அதற்கு நாரதர் "இனி எம்போன்ற முதியவர்கள் வந்தால் மணையைக் கையால் எடுத்து இடாமல் காலினால் தள்ளி அவமரியாதை செய்வது'' என்று கூறி அவ்விடத்தைவிட்டு நீங்கினார். இராவணன் இச்சங்கடம தனக்கு நாரதருடைய கபட சிநேகத்தால் உண்டா னதென்றுணர்ந்துகொண்டு, டன்னிரண்டு வருஷகாலம் வாலியின் வால் முடிச்சாகவே கிடந்து, பின்னர் வாலியினால் விடுதலை யடைந்தான்.

ஃ

"வஞ்சனை செய்வாரோ டிணங்கவேண்டாம்'' என்பது உலகநீதி. வஞ் சக நண்பனால் இராவணன் மாத்திரமா சிறைப்பட்டான்? இன்னும் எத்த னையோ மாந்தர் கெடுதியடைந்திருக்கின்றனர். இது உலக சரிதம் நாம் கபட நண்பரென்று பிறரைமட்டும் உரைப்பது கூடாது. நம்மைச் சுற்றி நின்று நமது அன்னத்தையே புசித்துக்கொண்டிருபபோருள்ளும் எத்த னையோ வஞ்சகர்கள் இருக்கின்றனர். இவ்வளவோடில்லை; அநாதிகாலமாக நம்மைத் தொடர்ந்து பற்றியுள்ள வஞ்சகரும் பலராவர். இவர்களின் சிநே கத்தால் நாம் நமது செல்வமான ஞானத்தினையும், தேவபக்தியான சிநேகித னையும், உபகிடதார்த்தமென்னும் மனைவியையும், பரமபதமான வீட்டினையும், நிரதிசயவின்பமான நித்திய சுகத்தினையும் இழந்து, பிறவி யென்னும் பெருங் கடலின் நடுவில் அகப்பட்டுத் தத்தளிக்கின்றோம். இவர்களின் பெயர்களை யும் இங்கு குறிக்கின்றோம். இவர்கள் அஞ்ஞானன்—சந்தேகன்—விபரீதன்—காமன்—லோபன் முதலியவர்கள். இக்கொடிய கபடர்கள் எந்நாளில் ஒருங்கே நம்மை விட்டொழிவார்களோ அன்றுதான் நாம் சுக மடைந்தவராவோம். இக்கொடியவர்களின் துர்நடையினின்றும் நம்மை யகற்றிச் சுகப்படுத்துமாறு அவர்கட்கு வைரியான எல்லாம்வல்ல கடவுளை வேண்டியவாறு அவருடைய திவ்வியமங்கள சொரூபத்தைச் சிந்திக்கின்றோம்.

---

கண்டவர்களிடமும், நடுவில் வந்து பேசுவாரிடமும் உன் தபால்களைக் கொடுத்து அனுப்பாதே. எவ்வளவோ முக்கிய காரியங்கள் உன் தபால்போய் நடக்கவேண்டியிருக்கும். அதன் பிரதானத்தைத் தெரியாதவர்களிடம் உன் தபால்களை ஒருபோதும் தந்தனுப்பாதே. பொறுப்புள்ளவரிடம் தா: அல்லது நீயே போ.

விவேகம்
விநோதம்
விசித்திரம்
விகடம்




அநுபவம்
அற்புதம்
ஆச்சரியம்
ஆநந்தம்

# முத்திப் போச்சுது!



"உன்னையன்றி யென்னுயிர்க் குலகில், எதுவோ வுறுதி யியம்பாய்!" என்று பேசி ஆர்வத்துடன் "அமிர்த குணபோதினி"யை ஏழாம் வருடத்திலும் ஆதரிக்க எழுந்த அன்பர்களே! நண்பர்களே! என் நஞ்சான் குஞ்சான்களே! என்னவோ விகடன் "முத்திப்போச்சுது" என்றானே? என்ன முத்திப் போச்சுது?—எதில் முத்திப் போச்சுது?—எதற்கு முத்திப்போச்சுது?—எப்படி முத்திப்போச்சுது?—என் முத்திப்போச்சுது?—எங்கே முத்திப்போச்சுது?—என்பீர்களோ? 'முத்தி' என்றால், மதலைப் பருவத்தில் தாயானவள் குழந்தையின் உச்சிமுகந்து உள்ளங்கால்வரை தடவிக்கொடுத்து அடா கண்மணி! விண்மணி! பொன்மணி! நன்மணி! ஜெயமணி யென்று சொல்லிக் கன்னத்தில் மும்முறை முத்தி கொடுத்துப் பிள்ளையாசையைத் தணித்துக்கொள்ளுகிறார்களே—அந்த முத்தி என்று எண்ணுதீர்கள்! ஒருக்கால் பருவமடைந்தையும், பச்குவ வாலிபனும் இடம் நேரம் ஒத்துக்கொண்டு தனிமையில் சந்தித்தபோது ஆசைக் கண்ணாட்டி யென்று அவன் அவளுக்கு முத்தி கொடுக்கவும், ஆசைக் கண்ணாளா—அன்பின் பெருக்கேயென்று அவள் இவனுக்கு முத்தி சொடுக்கவுமாகி மோகத்தை ஆற்றிக்கொள்கிறார்களே—அந்த முத்தியோவென்று எண்ணுவீர்கள்! அதுவுமல்ல! ஒருக்கால் முத்தீ என்றால், ஊழித்தீ—சாதாரணத்தீ என்று சொல்லப்படுகிற தீயைப்பற்றி ஏதாவது விகடன் பேச வந்தானுக்குமென்று எண்ணலாம்! அதுவுமல்ல! ஒரு சமயம் ஆகாயத்திலே, சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சமென்று முத்தி நிலங்களிருக்கிறதாக இந்து சாஸ்திரக்கந்தல் காவியமும், பொந்தல் புராணமும் புகலுகின்றதே, அதுதானோ வென்று ஸந்தேகிப்பீர்கள்! அதுவுமல்ல! பின் என்னதான் முத்தி என்பதற்குப் பொருளோ?—இளமை முத்தியும், வாலிபம் முத்தியும் துணிந்து செய்துவிடுகிற சங்கதிகளைத் தொனப்ப ஒருவேளை விகடன் வந்தானோவெனில் அப்படியுமல்ல! கடைசியாக, விகடனாகிய நானே அந்த "முத்திப்போச்சுது" என்ற மூட்டையை அவிழ்த்துக்கொட்டி விடுகிறேன்! கேளுங்கள்!

ஃ

இப்போது என்ன முத்திப் போச்சுது என்றாலோ—முருங்கைக் காய் முத்திப்போச்சுது! பருவத்திலே பிடுங்காத பயிர்கள் முத்திப்போச்சுது! ஜோக்கு சுந்தரங்கள் முத்திப்போச்சுது! அந்த சுந்தரங்களின் வால்பிடிக்கிற சொகுசு சுந்தரங்கள் முத்திப் போச்சுது! 'அவர்கள் இருவர் உள்ளமும் ஒருவழிப் படர்ந்து' காதல் நேர்ந்து முத்திப்போச்சுது! களவு வழிக் காமம் துய்க்கும் துன்மார்க்கம் முத்திப்போச்சுது! நெஞ்சில் சஞ்சலம் விளைவித்த சங்கதி முத்திப் போச்சுது! வீரமே உயிராய உடையார்க்கு வெற்றி முத்திப்போச்சுது! தூண்டிவிடுந் துரோகிகளின் எண்ணிக்கை முத்திப்போச்சுது! அநாதரவு முத்திப்போச்சுது! "தலைவிதி தடுக்கற்பாற்றோ?—தொல்லை அனுபவித்தன்றோ அகலும்" என்று பிலாபிக்கிற சங்கதிகள் முத்திப்போச்சுது! "யாரொடு நோவேன்?—யார்க்கெடுத்துரைப்பேன்?— வார்கடலுலகில் வாழ்கிலன்—மாளுவன் திண்ணம்" என்று சதறுதல் முத்திப் போச்சுது! தவசிகள் வேடம் தாங்கினோர் ஆலயமொன்றையே கண்டு சோம்பிக்கிடந்து ஊருக்கு உதவாமை முத்திப்போச்சுது! துறந்தார் முற்றுந் துறந்தவரல்லர் என்ற உண்மையும் முத்திப்போச்சுது! "பூவையை வளர்த்துப் பூனைக்கியவோ?— பேயனுக்களிக்கவோ பெற்றனம் பெண்ணை?"—என்று ஏங்குதல் முத்திப்போச்சுது! தங்கா மகிழ்ச்சியால் தலை தடுமாறுதல் முத்திப்போச்சுது! வாடி, வாயதுமூடி, மௌனமாய் வருந்தி நொந்து நோகல் முத்திப்போச்சுது! "பொய்யோ பண்ணிய புண்ணியமனைத்தும்" என்று பரிதபித்தல் முத்திப்போச்சுது! நலமே சிறந்த குலமே பிறந்த மடமின்னார்தம் கண்ணீர்கள் முத்திப் போச்சுது! "மங்கைய ரென்றுஞ் சுதந்திரபங்கர் — பேதையர்—எளிதிற் பிறழ்ந்திடு முளத்தர்" என்ற சொற்கள் முன்னைவிட அதிகம் முத்திப்போச்சுது! கரும்பே! யாங்கள் விரும்புங்கனியே! என்று மயக்குதல் முத்திப்போச்சுது! அந்த நாள் அன்னோர் நம்மிசை வளர்த்த ஆர்வமும் அன்பும் ஆ! ஆ! இன்று எங்கு போயினவோ என்று உருகுதல் முத்திப் போச்சுது! வெளுத்த தெல்லாம் பாலெனு மெய்ம்மை யுளத்தினரும், களங்கமோராதாரும் கஷ்டமுற்றுக் கலங்கல் முத்திப்போச்சுது! சூதே யுருவாய்த் தோன்றி, நல்லவன்போலவே நடித்தல் முத்திப்போச்சுது! பாலையும் நஞ்சாகப் பண்ணுபவர் தொகை முத்திப்போச்சுது! மடத்தனங் கருதித் தம்மையும் பிறரையுங் கெடுத்திடு மாந்தரின் கெடுமதி முத்திப்போச்சுது! "சிந்தனை முடிந்தது-துணிவம் இனி" எனத் துணிதல் முத்திப்போச்சுது! அறிவிலாத் தந்தையர்தம் வினை மக்களைச் சாருதல் முத்திப்போச்சுது! "இக்காய மினி யெனக்கு மிக்க வருவருப்பே" எனக் கசப்போடும் மொழிதல் முத்திப் போச்சுது! பட்டேயுணரு முட்டாளர்கள் தொகை முத்திப்போச்சுது! வருவது வருக—புரிகுவம் நன்மை என்ற கொள்கை முத்திப்போச்சுது!

ஆறுமா றென்னை?
தேறுமா றென்னை?
உன்னருளின்றி
மற்றென்னுள தெமக்கே?

என்று இறைவனை நோக்கிக் கலங்குதல் முத்திப்போச்சுது!

---

எத்தகைய தடங்கல் ஏற்படினும் அதை நிவர்த்தி செய்துகொள்ளும் திறமை வாய்ந்தோராகச் சிலர் இருப்பதும், அவர்கள் தொட்ட மண்ணும் பொன்னுவதும் ஒருவித கைராசி தான்.

அழுவதேன்! எழு! எழு!
யா ரறிவார்கள்!
உன்னுளம் படும்பா
டென்னுள மறியும்

என்று தேற்றுதல் முத்திப்போச்சுது! தேற்றத் தேற்றப் பெருகும் துயரம் முத்திப்போச்சுது!

இகத்துள சுகத்திற்(கு)
அளவு கோலாகி
பரத்துள சுகத்தை
வரித்த சித்திரமாய்

விளங்கிய இல்லறம் இன்று கலகக் களஞ்சியமாய் நாறுஞ் சாக்கடையாய் முத்திப்போச்சுது!

இதுவரை நினைத்தவை
யெல்லாம் போயின!
புதுவழி கதுவம்!
போயின போதுக!

என்று தன்னுள்ளத்தைத் தேற்றிக் கொண்டு திடப்படுதல் முத்திப் போச்சுது!

எத்தனை சூதுளான்!
எத்தனை கோடியன்!

என்று வயிறு எரிதல் முத்திப்போச் சுது! "நல்லுயிர்த்துணைவரே! நண் பரே! ஒருமொழி சொல்லிட வாசை! சொல்லவோ?—என்று அன்பர்களுக் குள்ளே கொஞ்சிக் குலாவுதல் முத் திப்போச்சுது! "கேட்டனை—கெடு பயல் கொடுமொழி" என ஆத்திரப் படுதல் முத்திப்போச்சுது! "மூட் டின னுட்பகை" எனக் கோபம் கொதித்தல் முத்திப்போச்சுது!

எனக்கினி
யேய்துவ
தறியேன்

என்று சோர்ந்து விழுகை முத்திப் போச்சுது! "நம்பிய பாய்மரம் பழுது" என்று அழுவது முத்திப் போச்சுது! "அன்பிலன்—பிறர் படுந் துன்பஞ் சிறிது மறியா வெறியன்" என்று ஒரு சிலரைக் குறித்துத் தூற் றுதல் முத்திப்போச்சுது!

இங்கோ நீயுனை!
என்னுயி ரமிர்தே!

எனக் கட்டியணைத்தல் முத்திப்போச் சுது! "பழைய புண்ணியர் தூண் டிடல்" முத்திப்போச்சுது!

ஃ

குடி முத்திப்போச்சுது! கொலை முத்திப்போச்சுது! வியாபாரத் துரோ கம் முத்திப்போச்சுது! பிராதுகள் முத்திப்போச்சுது! வாக்குறுதியின்றி நிமிஷத்திற் கொருவார்த்தை முத்திப் போச்சுது! எஜமானனைப் போலவே வேலைக்காரர்களும் மோசக்காரர்களா தல் முத்திப்போச்சுது! பெரியோ ரைக்கண்டால் பரிகாசங்கள் முத்திப் போச்சுது! "நமக்குத் தெரிந்தவன்" என்கிற அலக்ஷியம் முத்திப்போச் சுது! நாகரீகம் முத்திப்போச்சுது! காலர் ஷர்ட்டு முத்திப்போச்சுது! ஆண் பெண்களிடத்திலும் அடுப்பங் கட்டி யிடத்திலும் ஆங்கிலம் முத்திப் போச்சுது! அநீதி முத்திப்போச்சுது! அழும்பு முத்திப்போச்சுது! பிரா மணர்—பிராமணரல்லாதார் பிளவு முத்திப்போச்சுது! கடவுளே யில்லை யென்ற நாஸ்திகக்கக்ஷி முத்திப்போச் சுது! வேலை நிறுத்தங்கள் முத்திப் போச்சுது! எங்கும் வியாபாரச் சுணக்கம் முத்திப்போச்சுது! சித் திரைமாசத்து வெயில் முத்திப்போச் சுது! வெளியூரிலிருக்கிற நூலாசிரி

---

சாஸ்திரங்கள் விதித்துள்ள திட்டங்களின் பொருள் உன் அதிகப்படிப்புப் புத்திக்கு எட்டாவிட்டாலுங்கூட, அந்த சாஸ்திரதர்மப்படியே நீ நடப்பது தான் சரி, அதனால் கெடுதலில்லை. நன்மையே 100-க்கு 99-பங்குக்கு உண்டு.

யர்களைச் சென்னைப் புஸ்தகவியாபாரிகளிற் சிலர் ஏமாற்றுதல் முத்திப்போச்சுது! புருஷன் மனைவிக்குள் கலகம் முத்திப்போச்சுது! தாது புஷ்டி லேகியங்களும், மருந்து விளம்பரங்களும், மோசக் கேட்லாக்குகளும் முத்திப்போச்சுது! ஆங்கில மொழி பெயர்ப்பு நாவல்கள் முத்திப்போச்சுது! ஃ

லஞ்சம் முத்திப்போச்சுது! வஞ்சம் முத்திப்போச்சுது! படித்துவிட்டு உத்தியோகத்திற்குத் திண்டாடுதல் முத்திப்போச்சுது! மடாதிபதிகள்—மகந்துகளுக்குக் காமம் முத்திப்போச்சுது! கேசுகள் முத்திப்போச்சுது! கோர்ட்டுகள் முத்திப்போச்சுது! லாயர், வக்கீல், அட்டர்னி, பாரிஷ்டர்கள் பதவி முத்திப்போச்சுது! நடுவே வந்து முளைத்தவனின் நாலுநாள் அதிகாரம் முத்திப்போச்சுது! ஒண்டவந்த பிடாரி ஊர்ப்பிடாரியைத் துரத்துஞ் சங்கதி முத்திப்போச்சுது! விகர்ப்பங்கள் முத்திப்போச்சுது! விரோதங்கள் முத்திப்போச்சுது! வடகலை தென்கலை வைவரிசை காட்டுவது முத்திப்போச்சுது! மந்திரம் தந்திரம் முத்திப்போச்சுது! வைகுண்ட வைத்தியம் முத்திப்போச்சுது! முளைத்து மூன்று இலை புறப்படுவதற்குள் ஊர்மேயும் விகாரம் முத்திப்போச்சுது! கலி முத்திப்போச்சுது! கூத்துகள் முத்திப்போச்சுது! பொழுது போனால் ஜோடிகள் முத்திப்போச்சுது! மோட்டார் சேவைகள் முத்திப்போச்சுது! பொச்செரிப்பு முத்திப்போச்சுது! கோள் குண்டுணித்தனம் முத்திப்போச்சுது! அங்கலாய்ப்பு முத்திப்போச்சுது! கெடுங்காலத்துக் கேற்றபடி ஏமாற்று வித்தைகள் முத்திப்போச்சுது! அங்காடி கூடையை அதிர அடிக்கிற விதங்கள் முத்திப்போச்சுது! அல்லல் முத்திப்போச்சுது! அவதிகளும் பிணிகளும் அடுக்கடுக்காய் முத்திப்போச்சுது! வீட்டுவரி, விளக்குவரி, காட்டுவரி, கரைவரி, மாட்டுவரி, மனைவரி, ஆட்டுவரி, அடுப்புவரி, துடுப்புவரி, வியாபாரவரி, விளைவுவரி, வருமானவரி, வாரிக்கொண்டு போகிறவரி யென்று பற்பல வரிகள் முத்திப்போச்சுது!

ஃ

தனக்குத்தான் ஆள்பலம், கைப்பலம் இருக்கிறதென்ற கர்வம் முத்திப்போச்சுது! கடன் முத்திப்போச்சுது! புனைசுருட்டுப் பருவம் முத்திப்போச்சுது! தனக்கு நடுவழியில் வந்த பொருளைத் தக்கவாறு காத்திடாமல் உள்ளதையும் இழக்கிற பருவம் முத்திப்போச்சுது! அநேகம் பெண்களுக்கு விவாகத்திற்கான பருவம் தாண்டி முத்திப்போச்சுது! பெற்ற மகனுக்கே துரோகம் செய்தல் முத்திப்போச்சுது! சீட்டா, பங்கி, மாஜினம், கஞ்சா, அபின் முத்திப்போச்சுது! உள்ள சம்பளங்களைக் குறைக்கிற சங்கதி முத்திப்போச்சுது! தன்னையவன் நன்றாகத் தெரிந்து கொண்டதால் இனி ஏமாறமாட்டான் என்று விலகுதல் முத்திப்போச்சுது! வீட்டுக்கு வந்தவர்களுக்கு ஆயாசம் தீர்க்காது வாய் உபசாரமாக வழி அனுப்புதல் முத்திப்போச்சுது! தன் அயோக்கியதையை மறைத்து இன்னொரு புதியவனிடம் யோக்கியனாகக்

---

ஒருவனுக்கு மாத்திரம் குற்றங்குறைகளினால் ஏற்படும் மனத்தின் களங்கம் இல்லாதிருக்குமேயானால் அவன் வாணாள் எவ்வளவோ இன்பமாய் நடைபெறக்கூடும். ரகசியமாய்த் தான்புரிந்த செயல்கள் தன்னை வாதிக்கும் வாதனையத்தனை சிறைச்சாலைகூட அவ்வளவு வாதிக்காது.

காட்டுதல் முத்திப்போச்சுது! வீட்டுச் செலவுகள் முத்திப்போச்சுது ! ஓயா விருந்துகள் முத்திப்போச்சுது ! சம்பாதிக்கத் திறமையற்றவர்களுக்குக் கூடக் கல்யாணங்கள் முத்திப்போச்சுது ! ஒருவன் சம்பாதிக்கப் பத்து பேர் உட்கார்ந்து தின்பதும் முத்திப் போச்சுது ! இப்படியாக எங்கும் எதுவும் எந்த காரியங்களும் முத்திப் போய்விட்டதால் விகடனும் "முத்திப் போச்சுது" என்று சொல்லிக் கொண்டு புறப்பட்டேன் ! மொத்த பாகத்துக்கு நல்ல அம்ஸங்களைவிடக் கெட்ட அம்ஸங்களே முத்திப்போயிருப்பதால், இப்போது பிறந்த புதிய ஆங்கீரச வருஷமேனும் திருத்தி ஒழுங்குபடுத்தாதா என்று சிந்தித்தபடியே விகடன் என் கோணைத்தடியைத் தூக்கிக்கொண்டு எல்லோருக்கும் என் புதுவருஷ வந்தனங்களைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன் ! என் நஞ்சான் குஞ்சான்கள் புது வருஷத்தில் நல்வாழ்வு காண்பார்களாக ! வரு துயர்—சூழ் பிணி—யாவும் தொலைய வாழ்க ! ராம் ! ராம் ! சுபம் ! சூ !! சுவாஹா !!!

## வீணே நாள் கடத்திவிடுதல்.

ஒரு விவகாரத்திற்காக எந்த வக்கீலையாவது பார்த்துப் பேசிச் சில விஷயங்களைத் தெரிந்துகொள்ளக்கருதி ராமனை அழைத்தால் அவன் நாளையதினம் போகலாம் என்கிறான். பிறகு மறுதினமோ அவன் கண்ணில் தென்படுவதேயில்லை. சிலநாள் பொறுத்து ராமன் எதிர்படும் போது, என்ன அப்பா, வக்கீல் வீட்டுக்கு வருகிறேனென்றாய், வரவேயில்லையே என்றால், அதற்கு அவன் "நான் எந்த வக்கீல் திறமையுள்ளவரென்று விசாரித்துக்கொண்டிருந்தேன். இன்று மாலை அவசியம் போகலாம்" என்கிறான். மாலையிலோ அவன் வருவதில்லை. இப்படியே பல நாட்களைக்கழித்துவிடுவதே தவிர, ஒரு பிடிவாதமாய் அதே வேலையாக நின்று வக்கீலிடம் தன் நண்பனை அழைத்துச் சென்று ஏற்பாடு செய்வதில்லை. இதற்குள் இருபக்கத்திலும் ராஜி ஏற்பட்டுச் சமாதானமாகிவிட, அதையறிந்த ராமன், இனி வக்கீல் வீட்டுக்கு ஏன் போக?—ராஜிதான் ஏற்பட்டுவிட்டதே என்கிறான். இந்த சமர்த்தான வாய்ப் பேச்சினால் என்ன பிரயோஜனமோ ! ஏமாற்றுகிற தன்மையில்லாதிருந்து ஒருவனுக்கு ஒரு உதவி செய்ய நினைத்தால் அதைச் செய்துவிட்டுப் புசிப்பதே சிலாக்கியம்.

ஒவ்வொருவனுக்கும் அவனது வாணுளில் மிகுந்த பிரக்யாதியை யளிக்கும் நேரங்களும் நிமிஷங்களும் சில வருவதற்கிருக்கின்றன. நல்லகாலம் வரின் அவைகளும் அவனை நெருங்கும்.



ஸ்ரீரங்கத்திலே இதுவரை பெண்கள் கூடிப்பேச ஆற்றங்கரையும் அரங்கன் கோயிலுமே இருந்ததாம்! இப்பொழுது பம்புக் குழாய்களும் ஏற்பட்டுவிட்டதில் வம்புகள் பேசிக்கொள்ள வெகு சௌகரியமா யிருக்கிறதாம்!

ஃ

நிலங்களைவிற்று நகைகள் செய்து போட்டுக்கொள்ளும் அறிவு பெண்களுக்குள்ளே பெருகும்போதுதான் தேசமும் முன்னுக்கு வருமாம்!

ஃ

எவரையும் நெருங்கவொட்டாமல் துரத்திவிட்டுக் காசை முடிபோட்டுச் சேர்க்கிற பணம் கடைசியிலே வைத்தியர்களின் வகைக்கு மாறிப்போகிறதாம்!

ஃ

உண்மை வெளிப்பட்டுவிட்டதும் வெட்கம் மறைந்துபோய்விடுமாம்!

ஃ

தரித்திராதேவி தங்குவதற்கு வருவதெப்போதென்று ஒருவர் கேட்க, துரோக புத்தி முளைக்கையிலே யென்று விகடன் பதில் சொன்னானாம்!

ஃ

ஒருவனின் நாணயக் குறைவும், அவனது மோசங்களும் பெரிய மனிதன் என்கிற பெயருக்குள்ளே மறைந்துவிடுமாம்!

ஃ

வாய் பெருத்த பெண்கள் தங்கள் வாழ்வைக் குலைத்துக்கொண்டாலும் தாங்கள் பேசிய வார்த்தைகளை மட்டும் ஆஸ்தியாக வைத்துக்கொள்வார்களாம்!

ஃ

வீடுகள் தீப்பிடிக்கிற இடத்தில்தான் நல்ல குடங்களை அமுக்கிக்கொள்ள வழி கிடைக்குமாம்!

ஃ

வெளியூரிலிருந்து திரும்பிவந்த வீட்டுக்காரன் அந்த முதல் தினத்திற்குமட்டுந்தான் வீட்டின் ராணிக்குப் புதுப் புருஷன்போல் தோன்றிப் புது மரியாதையும் பெறுவானாம்!

ஃ

திருட்டு விபசார நாய்கள் வீட்டுக்காரன் இல்லையென்றெண்ணி உள் நுழைந்து, அங்கு அவன் குந்தியிருப்பதைக் கண்டதும் உடனே சொல்லாமல் ஓடிவிடுகிறதுகளாம்!

ஃ

தான் திருடிவந்துவிட்ட நகைக்குப்பதிலாக வேறு புது நகை செய்து அணிந்திருப்பதைக் காணும் திருட்டுக்காரிக்கு அந்த நகையையும் முன்போல்தான் கொண்டுபோக முடியுமாவென்ற புத்தி தோன்றுமாம்!

ஃ

சில பாகவதர்களுக்கும், சில ஆசார்ய புருஷர்களுக்கும் அழகு தருவது அவர்கள் வைத்துக்கொண்டிருக்கும் விபசார நங்கைகள்தானாம்!

ஃ

நாலுநாள் அதிகாரத்திலே தலை துள்ளிப்போகிறவர்கள் பிறகு தங்கள் அதிகாரம் தொலைந்ததும் பழயபடி வெகு சாதுக்களாகிறார்களாம்!

ஃ

பெண்டாட்டி பிள்ளையில்லாதவனுக்குச் சொத்தும், புருஷத்துவமில்லாதவனுக்கு அழகு கண்ணாடியும், பல்லில்லாதவனுக்குக் கரும்பும், கால் இல்லாதவனுக்குப் பாதரட்சையும் எதற்காகவென்று விகடசித்தர் வினவுகிறார்!

ஃ

அப்பனும், ஆத்தாளும், அவன் பிள்ளையும் மருமகளும் எல்லாருமே குள்ளநரித் தந்திரங்களில் தேர்ந்துவிட்டால், அங்கு வருவோர்க்கு அந்த வீட்டுக்குள் ஒரு நாழிகை தங்குவதற்குக்கூட இடம் கிடைக்காதாம்!

ஃ

ஒருவனுடைய சங்கதிகளை அவன் மூஞ்சிக்குநேரே சொல்ல வாயெடுத்ததும், அவன் கோபமெல்லாம் திரண்டு உருண்டுகொண்டு வருமாம்! அந்த வார்த்தையையும் மேலே தொடங்கிப் பேசாதபடி குதிப்பானும்!

ஃ

தான் அதிக சமர்த்தனென்று நினைப்போன்தான் தடுமாறிப் போவானும்! தன் சமர்த்துக் காட்டப்போய் தன்மீது பிறருக்கு இருந்த நம்பிக்கையையும் இழந்துவிடுகிறானும்!

ஃ

வாய்ச்சுளுவாக இகழ்ச்சியாய் எதிர் மனுஷ்யனைப்பற்றிச் சொல்லிவிடும் வார்த்தைகள், அந்த எதிர் மனுஷ்யனுக்கு நல்ல விழிப்பைக் கொடுக்கின்றதுகளாம்!

ஃ

மனைவியை யடக்குவதற்கு அவள் மேல் இருக்கும் நகைகளெல்லாம் அடகுக்குப்போனால் சரியாய்விடுமாம்!

ஃ

குழந்தைகள் இருக்கிற வீட்டிலே வேறு விருந்து சந்தடிகள் வேண்டியதில்லையாம்! வீட்டைவிட்டு உடனே போகாத விருந்தினர் அவ்வீட்டுக் குழந்தைகள் தானும்!

ஃ

சின்னஞ் சிறுமியாக இருப்பினும் தன் தம்பிக்குத்தான் அக்கா என்கிற ஸ்தானத்தைச் சரிவர வகித்துக்கொள்ளுமாம்!

ஃ

அடங்கி நடப்பவர்களெல்லாம் அடங்கிக் கிடப்பவர்களுமல்ல; ஏமாந்ததுபோல் இருப்பவர்களெல்லாம் ஏமாறிப்போனவர்களுமல்ல; எல்லாம் அவரவர் காரியத்துக்குத்தான் அப்படித் தோற்றிக்கொள்கிறார்களாம்!

ஃ

இருவருக்குள்ளும் எவ்வளவோ ஆசையும் எண்ணங்களுமாம். ஆனால் வாய்விட்டுச் சொல்லிக்கொள்ளவும், துணிந்துவிடவும் இடங்கிடைக்கவில்லையாம்! இடம் கிடைக்கிற வேளைக்கு நேரம் கிடைக்கவில்லையாம்!

ஃ

ஒவ்வொரு வீட்டிலும் கடையிலும் அங்குள்ள பவிசை வெளியில் கொட்ட ஒவ்வொரு ஆள் இருப்பானும்!

ஃ

பிள்ளையில்லாத வீட்டிலே அந்த வீட்டு அரசனும் ராணியுமே சிறு குழந்தைகள்போலாகிறார்களாம்!

ஃ

சண்டையிட்டுப்பிரிந்த இருவரும் ஒன்றுகூடிவிடுகையில், தாண்டிவிட்டவனுக்கு அதுவரை கிடைத்துவந்த கௌரவமும் காசு பணமும் காப்பியும் தொலைந்துபோய்விடுகிறதாம்!

ஃ

ஒருவன் ஒரு குடும்பத்தை அடியோடு நாசப்படுத்த நினைக்க, அதே குடும்பத்தைத் தான் கடவுள் நன்கு வாழவைக்க எண்ணுகிறாராம்!

ஃ

தான் விரோதியாயிருந்து உண்ட வீட்டுக்குச் செய்த சண்டாளத்தனங்களை அந்த வீட்டுக்காரன் மறந்துவிட்டாலும், தன் துரோகவுள்ளம் அதை எளிதில் மறக்கமாட்டேனென்கிறதாம்!

ஃ

ஒன்றில் பட்டுக்கொள்ளாமலும் இருக்கவேண்டும்; அந்த ஒன்றைத் தான் செய்துகொடுத்து விடுவதாகவும் நடிக்கவேண்டும்; கடைசியில் செய்யாமலும் இருக்கவேண்டும்; தன்னுள்ளத்தைப் பிறர் அறியாதபடியும் மயக்கித்தான் வெகு வேண்டியவனாகவும் உதவுகிறவனாகவும் காண்பித்துக் கொள்ளவேண்டுமென்று சில விசுவாசக் கொக்குகள் நினைக்கிறதுகளாம்!

# தெரியாதவனுக்கு ஏன் தெரிவிக்க?



அவனுக்கு அந்த வீட்டின் விஷயம் தெரிந்திருக்குமென்றும், ஆகவே அதைப்பற்றி அவனிடம் பிரஸ்தாபிப்பதால் குற்றமில்லையென்றும் நினைத்து ஒருவர் சொல்லத் துணிகிறார். அதைக் கேட்பவனோ ஒரு புது சங்கதியாகவும் அப்போது தான் அதை யறிபவனாகவும் தோன்றுகிறான். அந்த ஜாடையைக் கண்டதும் விஷயத்தைச் சொல்லவந்தவர் சட்டென்று அதை ஒரு விதமாகச் சுருக்கி முடித்துவிட்டுத் தான் தெரிவிக்கவந்த விஷயங்களை வெளியிடாமல் நிறுத்திவிடுகிறார். முன் விஷயங்கள் தெரியாதவனுக்குத் தன் மூலமாக ஏன் தெரியவேண்டுமென்றும், தான் சொல்லவந்த வீட்டின் ஆபாஸச் செயல்களை அவன் அறியாமலேபோய், அவ் வீட்டைப்பற்றி இதுவரையில் அவன் கௌரவமாக நினைத்து வந்ததுபோல இனியும் கருதிக்கொள்ளட்டுமென்றும், எண்ணி விடுகிறார். இது பிறாது வீட்டின் செய்தியைத்தான் வெளியிடாமல் அவ்வீட்டின் கௌரவத்தைக்காக்கும் உத்தமவழியாகும். தெரியாதவனுக்குப் புதிதாக ஏன் தெரியவைக்க?—என்று எண்ணி மறைத்துவிடுவதே மதிக்கத்தக்க செய்கையாகும்.

உதாரணமாக! ஒரு சீமான் தான் கௌரவப்பட்டம் பெற்றதற்காக ஒரு தோட்டக்கச்சேரி நடத்தித் தமது நண்பர்களை ஸந்தோஷிப்பிக்கின்றார். அந்த விசேஷத்தைப்பற்றி ராமு கோபுவினிடம் சொல்ல வருகிறான். கோபுவுக்கு அந்த சீமானின் வீட்டு விஷயங்கள் யாவும் தெரியும். கோபுவோ தன்னைப்போலவே ராமுவும் சீமானின் வீட்டு விஷயங்களை அறிந்திருப்பானென்று எண்ணி, அந்த சீமானின் புத்திரி தன் கணவனை நீக்கிவிட்டு அன்னியனொருவனைத் தன் அந்தரங்கக் காதலனாகக் கொண்டிருந்ததையும், தன் மனைவியின் சோரநடத்தையைச் சகியாது கணவன் மாண்டதையும் ராமுவுக்குச் சொல்லிக் காண்பித்து அவனுடன் பேச்சில் கலந்து கொள்ள முற்படுகின்றான். ராமுவுக்கோ சீமானின் வீட்டு விஷயங்கள் எதுவுமே தெரியாததலின் ஒரு புதுச் செய்திபோல் கேட்க ஆரம்பிக்கிறான். அதைக் கண்டதும் கோபு தெரியாதவனுக்குத் தெரிவித்துப் பெரிய இடத்து விஷயங்களை ஏன் வெளியிலிழுத்துப் பறையடிக்க வேண்டுமென்றெண்ணி அவ்வளவுடன் அதை முடித்துப் பேச்சை வேறு விஷயங்களில் மாற்றிவிடுகிறான். கோபு மறைத்ததை ராமு அறியாமலே போவதுமுண்டு.




# இராஜ சந்திரன்

## அல்லது—மறைந்த கைதி.



### அத்தியாயம்—7.

#### கமலவல்லியின் சந்தேகம்.

#### VIII

[குறிப்பு :—பின்வரும் கதாவிவரங்களை இந்த ஏழாவது வால்யத்தைப்பெறும் புதிய சந்தாதாரர்கள் அறிந்துகொண்டு வாசிப்பின் கதையின் தொடர்ச்சி தெளிவாக விளங்குமென்ற நோக்கத்துடன் இங்கு குறிப்பிடுகின்றோம். ஸ்ரீமான் மாதவராய முதலியாரவர்கள் எழுதிய ஓர் ஆங்கில நாவலின் தமிழ் மொழி பெயர்ப்பை நாம் பார்க்க நேர்ந்ததில் அது முற்றிலும் மேனாட்டுக் கதையாகவே, அசல் ஆங்கில மொழிபெயர்ப்பாகவே இருந்தது. உத்தமியும் பதிவிரதாங்கனையும் கதாநாயகியுமான கமலவல்லி ஒரு அன்னிய ஆடவனை இச்சித்து அவனோடு வீட்டை விட்டு எவருக்கும் தெரியாமல் ஓடி மறைந்து, வியபிசாரியாகி, யாவரும் பரமதுஷ்டையென்று தூற்றத் தொடங்க, தனது சோர நாயகனால் கர்ப்பமுற்று, ஆஸ்பத்திரியில் ஓர் மகவையும் ஈன்று, அதுவும் சாக, இவளும் நோக, தன் உருவமே மாறி நரைத்து அலங்கோல மடைந்து, சோர நாயகனும் பின்னர் சீச்சீயென இகழ்ந்து தெருவில் அலையும்படி விட்டுவிட, கடைசியில் தன் குழந்தைகளைக் காணக்கருதிக் கணவனிடம் சேர்ந்து, நோய் மிகுந்து வெறிபிடித்து ஈன நிலையில் இறந்து பாழாகின்றாள். இவளுக்குப்பின் இவள் கணவன் கிருஷ்ணவேணி என்பவளை மணந்து வாழ்கின்றான். இதுவே அந்த ஆங்கில நாவலின் கதாசாரம். இக்கதையின் ஆங்கில அமைப்பு தமிழ் மொழிக்குச் சற்றும் சுவை தராதாதலின், கதையை ஆரம்ப முதல் அடியோடு மாற்றி, கதாநாயகியான கமலவல்லியைக் கற்புலக்ஷண உத்தமியாக அமைத்து, ஆங்கிலக் கதையின் பல பாகங்களை நீக்கி விட்டுப் புதியன புகுத்தி நாம் வரைந்ததில், ஸ்ரீமான் மாதவராய முதலியாரின் ஆங்கில கதா சாரக்கின் பாகம் 38-பக்கங்களில் ஐந்தாவது அத்தியாயத்துடன் முடிவடைந்து விட்டது. முடிவுற்ற இந்த ஐந்து அத்தியாயங்களிலும் எத்தனையோ பாகங்களைக் கழித்து விட்டு, வேறு புது விதமாகவே வரையும்படி நேர்ந்தது. இனி, ஆறாவது அத்தியாயத்திலிருந்தும் நாமே நமது சுய கற்பனையின்

வழியே எழுதிச்சென்றுள்ளோம். பருவ மடைந்த மங்கையான கிருஷ்ணவேணி கண்ணப்பனுடன் பேசி ஸல்லாபிப்பதைக் கமலவல்லி யின் வாய் மொழியாக எழாவது அத்தியாயத்தில் கண்டனம் செய்து, அது தகாத நடத்தையெனத் தமிழ் நாட்டின் போக்கில் குறிப்பிட்டிருக் கின்றோம். இங்ஙனமே மற்ற அத்தியாயங்களும் நம்மால் எழுதப் பெற்றுத் தொடர்ந்து சென்று முடிவுறும்.]

ஃ

இதுவரையிலும் வெளிவந்த கதையின் சாரம் பின்வருமாறு:—பெருஞ் செல்வரான சபாபதி முதலியார் தமது வீடான சாரதா விலாஸத்தைத் தமது கடன்களின் மிகுதியால் லாயர் கண்ணப்பனுக்கு விற்றுவிட முயன்று, தமது குமார்த்தியான கமலவல்லியைக் கண்ணப்பன் மணந்து கொள்ளும் நிபந்தனைக்கு இணங்கினால் இந்த விற்பனைக்குத் தாம் சம்ம திப்பதாகக் கூறுகிறார். கண்ணப்பனும் அந்த நிபந்தனைக்கு ஒப்புக் கொண்டு சாரதா விலாஸத்தை விலைக்கு வாங்கிக்கொள்ள, அதன்பின் சபாபதி முதலியாரும் தமது நோய் முற்றி மரணமாகிறார். சபாபதி முதலியாரின் தம்பியான சீனுவாச முதலியார் தமது குமார்த்தியான கிருஷ்ணவேணியுடன் வந்திருந்து தகனக்கிரியைகளை நடப்பிக்கிறார். பிறகு கமலவல்லி சில காலம் வரையில் தன் அத்தையான கோவிந்த முதலியாரின் மனைவி கனகாம்புஜத்தினிடம் தங்கியிருக்கச் செல்லு கிறாள். கனகாம்புஜமோ தன் குமாரன் பலராமனுக்குக் கமலமல்லியை மண முடித்துவிட விரும்ப, கமலவல்லி அதற்கு மறுத்துவிட, கனகாம் புஜம் கோபம் கொதித்து அடித்து ஹிம்ஸிக்க, அதன்பின் கண்ணப்பன் அங்கு வந்து கமலவல்லியைத் தனக்கு சபாபதி முதலியார் வீடுவிக்கிரய பத்திரத்தின் மூலம் பேசி நிச்சயித்திருப்பதாகக் கோவிந்த முதலியாரி டம் கூறி, அவர் அநுமதி பெற்று அழைத்துச்சென்று மணமுடித்துக் கொள்கின்றான். கண்ணப்பன் மீது நெடுநாளாகக் காதல்கொண்டு அவனை மணக்க நினைத்திருந்த கிருஷ்ணவேணி இந்த விவாகத்தை யறிந்து ஆத்திரம் கொள்கிறாள். தன்னை அவள் காதலித்திருந்தது தனக்குத் தெரியாதென்று கண்ணப்பன் கிருஷ்ணவேணியைச் சமா தானப்படுத்தி விவாக நன்கொடையாகத் தங்கப்பதக்க மாலையும் பரி சளிக்கிறான். கிருஷ்ணவேணி கண்ணப்பனுக்கு அத்தையின் மகளா வாள். இது நிற்க, கிருஷ்ணவேணிக்கு இராஜ சந்திரன் என்று ஒரு தமயனுண்டு. அவன் மகா உத்தமன். அவன் அபிராமி என்பவளைக் காதலித்து வந்தான். அபிராமியோ இராஜ சந்திரனிடம் காதல்கொள் ளாது வைரக்கடுக்கனும் வைரமோதிரங்களும் அணிந்த தங்கவேலு என் பவனை நேசிக்கிறாள். அபிராமியின் தந்தை தான் வேட்டைக்குச்செல்ல ஒரு துப்பாக்கி தரும்படி இராஜ சந்திரனைக் கேட்க, அவனும் தன் துப் பாக்கியைத் தரவந்தபோது வழியில் லக்ஷ்மணசாமி என்பவனைச் சந்திக் கிறான். அபிராமியின் தந்தை கேட்டதால் தான் துப்பாக்கியைக் கொண்டுபோவதாக அவனிடம் கூறிவிட்டு அபிராமியிடம் துப்பாக்கி யைத் தந்து அவள் தந்தையிடம் கொடுத்துவிட்டு வரும்படி சொல்லி,

---

தனக்கு சம்பந்தப்படாத விஷயத்தில் ஒருவன் தலையிட்டுக்கொண்டு பாடுபடுவதாயிருந்தால் அதில் ஏதாவது ரகசியம் இருந்தேதான் தீரவேண்டும்.

அவன் திரும்பி வருவதை எதிர்நோக்கி அங்கு உலாவியபடி யிருக்கிறான். இச்சமயம் தங்கவேலு அங்கு வந்து அபிராமியின் வீட்டிற்குள் செல்கிறான். அதே சமயம் லக்ஷ்மணசாமி இராஜ சந்திரனைக் கண்டு உன் துப்பாக்கி எங்கே என்கிறான். அவனுக்கு இராஜ சந்திரன் பதில் கூறவில்லை. பின் சில நிமிஷங்கள் கழிந்ததும், துப்பாக்கி சப்தம் கேட்டது. அப்பொழுது அங்கு வந்த எதிராஜன் என்பவன் இந்த சப்தம் கேட்டுத் திடுக்கிட்டு அபிராமியின் வீட்டிற்குள் நுழைகிறான். அதே சமயம் தங்கவேலு வெளியே வந்து பைசிகிலில் ஏறிச்சென்று விடுகிறான். அப்பால், இராஜ சந்திரன் அபிராமியின் தந்தை தன் துப்பாக்கியால் கொல்லப்பட்டிருப்பதைக்கண்டு, தன் துப்பாக்கி தன்னையே குற்றவாளியாக்கு மென்றெண்ணி, அந்தத் துப்பாக்கியை எடுத்துக்கொண்டு வெளியில் வர, அப்பொழுது லக்ஷ்மணசாமி இவனைக் கண்டு நில் நில் என்று தடுக்க, இராஜ சந்திரன் துப்பாக்கியை எறிந்து விட்டு ஓடி விடுகிறான். லக்ஷ்மணசாமி அவனைத் துரத்திச்செல்ல, இராஜ சந்திரன் தப்பித்து மறைந்துவிட, இதனை எதிராஜனும் பார்க்கிறான். இந்த ஸம்பவத்திலிருந்து இராஜ சந்திரனே உண்மையான கொலையாளி என்று ஏற்பட்டு அவனைப்பிடிக்க வாரண்டு பிறப்பிக்கப்படுகிறது. இராஜ சந்திரனின் தந்தையான ஸ்ரீநிவாச முதலியார் தன் குமாரனின் செயலை வெறுத்துத் தானே அவனைப் பிடித்துக்கொடுக்க முயல்கிறார். இராஜசந்திரன் தான் இரங்கூன் ஓடிப்போய் அங்கு தற்கொலை செய்து கொண்டதாக ஒரு கடிதம் தன் இரங்கூன் நண்பனின் மூலமாக நீதியதிபதிக்கு அனுப்பி விடுகிறான். இதிலிருந்து இராஜசந்திரன் தற்கொலை செய்துகொண்டு மரித்ததாகப் போலீஸார் நம்பி அவனைத் தேடுவதை விட்டுவிடுகின்றனர். இராஜசந்திரன் உரிகம் என்ற இடத்தில் மறைந்துகொண்டு அங்குள்ள பொன்சுரங்கத்தில் கூலியாளாக இருந்து ஜீவித்துவருகையில், ஓர் நாள் மாலையில் தன் வீட்டுத் தோட்டத்திற்குச் சென்று காத்திருந்து தன் தங்கை கிருஷ்ணவேணியைக்கண்டு நிகழ்ந்தன யாவும் உரைத்து, லாயர் கண்ணப்பனின் மூலம் உண்மைக் குற்றவாளியான தங்கவேலுவைக் கண்டுபிடிக்கும்படி வேண்டுகிறான். கிருஷ்ணவேணி அவனை மறுநாள் இரவு வருமாறு அனுப்பிவிட்டு, கண்ணப்பனிடம் இச்செய்தியைக் கூறுகிறாள். மறுதினம் இரவு இராஜசந்திரன் கண்ணப்பனைக்கண்டு யாவும் உரைக்க, கண்ணப்பன் தான் எவ்விதமும் கண்டுபிடிப்பதாகக் கூறி அவன் செலவுக்கும் பணம்கொடுத்து அனுப்புகிறான். பிறகு கண்ணப்பன் தன் வீட்டிற்குவந்து தன்னிடம் வேலையிலிருக்கும் ஜானகியை அழைத்து உன் சொந்தத் தங்கையான அபிராமி என்பவள் எங்கேயென்றும், உன் தந்தை எவ்விதம் கொலை செய்யப்பட்டாரென்றும் விசாரிக்கிறான். அதற்கு ஜானகி இராஜசந்திரன் தன் தந்தையைச் சுட்டுவிட்டு அபிராமியுடன் எங்கோ ஓடிவிட்டானென்கிறாள். தன் கணவன்

---

தன் வீட்டிற்குள்ளேயே சிறந்த புத்திமான் இருக்கையில், அவனை மிகு மேதாவி என்று மற்றோர் மதிக்கையில், அவனுடைய யோசனைகளைக் கேளாமல் வீட்டுக்காரன் வெளியிலிருப்பவர்களிடம் ஆலோசனை செய்யப்போய் விடுகிறான். அத்துடன் தன் வீட்டிற்குள் இருப்போனையும் அவமதிக்கிறான். கொல்லைப் பச்சிலை மருந்துக்கு உதவுமென்று தெரிவதில்லை.

வறுமையால் வாடி வெளியூருக்குச் சென்றுவிட்டதால் ஜானகி கண்ணப்பனிடம் வேலையிலிருக்கிருள்.

ஃ

கதாநாயகியான கமலவல்லி தன் கணவனிடம் கிருஷ்ணவேணி அடிக்கடி வந்து பேசுவதை வெறுத்து இவ்விருவர்க்குள்ளும் தவருன காதலுண்டோவென்று சந்தேகிக்கிருள். இந்த ஸம்சயத்திலேயே இவளது காலம் ஸஞ்சலமாய்ச் சென்றுகொண்டிருக்கையில் ஒரு ஆண் குழந்தைக்கும் ஒரு பெண் குழந்தைக்கும் தாயாகிருள். அக்குழந்தைகளைச் சீராட்டும் வேலையை ஜானகியிடம் ஒப்புவித்து, ஜானகி செய்துவந்த வேறு வேலைகளுக்காக ஒரு புது வேலைக்காரியை விரும்ப, கண்ணப்பன் முன்பு கிருஷ்ணவேணியின் வீட்டில் வேலை செய்துகொண்டிருந்த காமாட்சி என்பவளைப் புது வேலைக்காரியாக நியமிக்கிருன். காமாட்சி ஜானகியுடன் ரகசியமாகப் பேசுகையில் கிருஷ்ணவேணியின்மீது கண்ணப்பனுக்கு விசேஷித்த காதலுண்டென்றும், கமலவல்லி இறந்துவிட்டால் கிருஷ்ணவேணியையே கண்ணப்பன் மணப்பானென்றும் கூறுகிருள். இதைக் கமலவல்லி மறைந்துகேட்டு மனது புண்ணுகிருள். அதன் பின்பு கமலவல்லி மிக்க வியாகூலத்துடன் தன் கணவனைக்கண்டு, கிருஷ்ணவேணியிடம் காதல் கொள்ளாதிருக்கும்படியும், அவள் இங்கு வராதிருக்கும்படியும், தான் இறந்தாலும் கிருஷ்ணவேணியை மணக்கலாகாதென்றும், தன் குழந்தைகளை ஜானகியிடமேவிட்டு, ஜானகியை எப்போதும் வீட்டுடனேயே இருக்கச்செய்யவேண்டுமென்றும் கேட்டுக்கொண்டு பிரலாபிக்கிருள். அதற்குக் கண்ணப்பன் தான் கிருஷ்ணவேணியை நினைக்கவேயில்லையென்றும், அவள் தன் தமயன் இராஜசந்திரனின் விஷயமாகவே தன்னிடம் வருவதாகவும் கூறுகிருன். அதற்குக் கமலவல்லி இராஜசந்திரன் தன் உயிருக்குயிரான தமயனென்றும், அவனைக் கொலைக்குற்றத்திலிருந்து தப்புவிக்கவேண்டியது அவசியமே யென்றும், ஆனல், இந்தக் கிருஷ்ணவேணி தன் பருவ பக்குவ மங்கைத்தன்மையையும் மறந்து, இங்குவந்து அடிக்கடி குலாவுவதைத் தான் விரும்பவில்லையென்றும் தெரிவிக்கிருள். அதற்குக் கண்ணப்பன் தன் அத்தை மகளான கிருஷ்ணவேணியுடன் பேசுவதைக் குற்றமாக நினைக்கலாகாதென்கிருன். அந்த சமயம் கமலவல்லி தன் வேலைக்காரிகளான ஜானகியும் காமாட்சியும் பேசிக்கொண்டவற்றைத் தன் கணவனுக்குத் தெரிவித்து விடலாமாவென்று எண்ணி, பிறகு அவ்வாறு தான் சொல்வது அவ்விருவரையும் காட்டிக்கொடுத்ததாகுமே யென்று கருதி மௌனமாகி விடுகிருள்.

இது வரையில் "அமிர்த குணபோதினி"யின் ஆறுவது கமலத்தில் பிரசுரமாகி யுள்ளது. இவற்றை மனத்துட்பதிந்துகொண்டு, மேல்வரும் கதையின் தொடர்ச்சியைக் கவனிக்குமாறு வேண்டுகிறோம். S. G. R.

ஃ

---

சிறு குழந்தைகள் புதிய கெடியாரத்துக்குச் சமானமாய் வெகு சுறுசுறுப்புடன் உள்ளவர்கள்.

[6-ம் வால்யம் 752-ம் பக்கத் தொடர்ச்சி]

கண்ணப்பன் :—என்னைப் பற்றி யாராவது உன்னிடம் கோள் கூறினர்களா? புருஷன் மனைவியைப் பிரித்துப் பேதப்படுத்துகிறவர்கள் இந்த வீட்டில் எவரேனும் உண்டா?

கமலா:—யாரும் ஒன்றும் கூறவில்லை. என்னைக் கெடுக்கிறவர்கள் இந்த வீட்டில் எவரும் இல்லை. அவரவர்கள் தங்கள் சாதத்திற்கு வேண்டிய நெய்யைத் தாங்களே தாராளமாக ஊற்றிக்கொள்ளும்படியான சுதந்தரத்துடன் சொந்த வீடுபோல் நினைக்கும்படி நடத்தி வருகிறேன்.

கண்ணப்பன் :—போனதை மறந்துவிடு. கிருஷ்ணவேணி இங்கு வாராதபடி செய்து விடுகிறேன். உனக்குத் திருப்திதானே?

கமலா :—நீங்களும் நன்மனத்துடன் அவள் வீட்டிற்குப் போகாமலிருந்தால் தான் என் மனம் சமாதானப்படும்.

சிந்தையிற் புதைத்த
வந்தாங்கப் பொருள்
விழி முக நகை மொழி
தொழி னடை யிவை வழி
யொழுகிடும்...............

கண்ணப்பன் :—உன் பிரிய ஆருயிர்த் தமயனான இராஜசந்திரனின் விஷயத்துக்காக அடிக்கடி போகவேண்டியிருக்குமே. அதற்கென்ன சொல்லுகிறாய்?

கமலா :—பாற்கடலிலே அமிர்தமும் விஷமும் தோன்றியதுபோல இராஜசந்திரனும் கிருஷ்ணவேணியும் பிறந்திருக்கிறார்கள். என் தமயன் விஷயமாகப் போவதை நான் தடுக்கமாட்டேன். எனக்கு ஒரு வரம் வேண்டும்.

கமலா :—என் உயிரையே கேட்டாலும் கொடுக்கிறேன். என் அன்பின் ஆழம் நீ அறியாததா?

இரவியை நோக்கற்
கேன் விளக் குதவி?

கமலா :—தங்களின் உயிரை விவாக காலத்தில் மாங்கல்ய ரூபமாகப் பெற்றுக்கொண்டுவிட்டேனே. இப்போது நான் கேட்பது வேறு. ஜானகியையும் காமாட்சியையும் எந்தக் காரணங் கொண்டும் விலக்கக்கூடாது.

கண்ணப்பன் :—அது உன்வேலை; என் வேலை யல்ல. வீட்டு நிர்வாக விஷயத்திலேயே நான் பிரவேசிப்பது கிடையாதே. நீ யல்லவா அதற்கு எஜமானி. என் மனோபரிசுத்தத்தை நீ உண்மையாக நம்பு.

உன்னை யன்றி
யென் னுயிர்க் குலகில்
எதுவோ வுறுதி
யியம்பாய்?

என்றுகூறிக் கமலாவைத் தேற்றினான். கமலாவும் தன் சந்தேக ஸஞ்சலத்தை ஒரு பக்கம் அடக்கிக்கொண்டு, கண்ணப்பனை இன்னும் சோதிக்கக் கூடாதென்று அவனை அன்புடன் தழுவிக்கொண்டு முத்தம் தந்தாள். பிறகு இருவருமாகப் புசிப்பதற்குச் சென்றனர்.

---

செய்யவே முடியாதென்று நினைத்திருந்த காரியத்தை இன்னொருவன் செய்து முடித்திருப்பதை நாம் அறிகிறபோது நாமும் துணியலாம் என்றே தோன்றும். அத்துணிவு அதிலுள்ள கஷ்டங்களையும் அதி சுலபமாக எண்ண வைக்கும்.

## அத்தியாயம் 8.

### பொன்னுசாமியின் போக்கு.



மனஸ்தாபப் பட்ட நாட்களும், மகிழ்ச்சியுடன் கூடிக்குலாவி நின்ற நாட்களும் வெகு துரிதத்திற் சென்று கழிந்து மறைந்து விடுவது போலக் கமலவல்லியின் ஸஞ்சலமும் ஒருவாறு சற்றுத் தணிந்து அவளது காலம் பத்திரிகா புஸ்தகங்களை வாசிப்பதில் போய்க் கொண்டிருந்தது. ஒரு நாள் ஒரு மனிதன் கமலவல்லியைத் தேடிக் கொண்டு சாரதா விலாஸத்திற்கு வந்தான். அவனுக்கு வயது சுமார் முப்பது இருக்கும். சிவந்த நிறமான தேகத்தில் ஒவ்வொரு அவயவங்களும் வெகு அழகாக அமைந்திருந்தன. அவனுடைய மூக்கு கிளியின் மூக்கு போல் வளைந்திருந்ததும் ஒரு புது சுந்தரத்தைக் கொடுத்தது. அவன் அதிக உயரமில்லாமல் ஒரு நிதான அளவிலேயே இருந்தான். அவனுடைய பெயர் பொன்னுசாமி. அவன் கமலவல்லியின் தந்தையினது பங்காளி மைத்துனருடைய பிள்ளை. அவன் சபாபதி முதலியார் இருந்த காலத்தில் அடிக்கடி சாரதா விலாஸத்திற்கு வருவான். ஸ்திரீ லோலனனபடியால் அவர் அவனை விரும்புவதில்லை. ஒரு சமயம் ஒரு வாரம்போல் சாரதாவிலாஸத்தில் தங்கியிருந்ததில் வீடு பெருக்கும் ஸ்திரீயையும், இன்னொரு யுவதியான நங்கையையும் வெகு துரிதத்தில் வசப்படுத்திக் கொண்டதை யுணர்ந்து சபாபதி முதலியார் அக்கணமே அவனை வெளியேற்றினர். ஸ்திரீகளின் கற்பு அவனுக்கு ஒரு தித்திப்பான மிட்டாயாக இருந்ததன்றி, அது சுலபத்திற் கிடைத்து விடக்கூடிய தின்பண்டமென்றே அவன் நம்பினன். ஒரு பிச்சைக்காரிக்கு ஒரு காசு தருவதிலுங்கூட அவன் கையைத் தொட்டுக்கொடுப்பான். அதன் பொருள் என்னவோ! அவ்வழியில் அந்த ஸ்பரிச உணர்ச்சியின் நயத்தை யறிவதற்கோ யாதோ! உலகில் காமுகர்க்கு என்னென்ன உபாயங்களெல்லாம் தெரியவருமோ அவர்களினும் மேலான பாண்டித்தியத்தைப் பொன்னுசாமி பெற்றிருந்தான். அவன் பெயரைப் "பெண்ணுசாமி" என்று திருத்திக்கொண்டால் இன்னும் அதிகப் பொருத்தமாயிருக்கும். இவனுக்குப் பதினாயிரம் ரூபாய் வரையில் ஆஸ்தியிருக்கிறது. பணத்தின் அருமை தெரியாமல் வீணில் செலவழிப்பவனுக்கு லக்ஷம் ரூபாய் ஆஸ்தியிருப்பினு மென்ன பயன்? யாவும் சில நாளில் தீர்ந்துபோமன்றோ? இவனது ஆடம்பரச் செலவைக் கண்ட தந்தை பல முறை நற்புத்திகள் கூறித் திருத்த முயன்றார். வளர்ந்து நெடுமரமாய் முளைத்தபிள்ளை தந்தையின் புத்தியைக் கேட்பது எது? தந்தையைத் தூற்றாமலிருந்தாலே அதுவே போதும். இவனுடைய விபசாரச் செலவுகளுக்கு எவ்வளவு பணம் கிடைத்தாலும் போதாதிருந்தது. இவனுடைய நடத்தையைக் கண்டு இவன் தந்தை தன்னுடைய ஆயுளுள்ளவரையில் இவனுக்கு ஒரு காசேனும் கொடுக்கக் கூடாதெனத் தீர்மானித்திருந்ததுமன்றி, அவ்வூரில் இவனுக்கு யாரும் பணம் உதவி செய்யவாவது கடன் கொடுக்கவாவது

---

உணர்ச்சி என்பது நம் சரீரத்துள் ஒரு மணியொலி போலாம். சிறு நீர் பெய்யும் வேளை வந்துவிட்டதென்று ஒரு உணர்ச்சி நமக்குத் தோன்றுமாகில் மணியொலிபோல் அது நம்மைத்தட்டி எழுப்ப, உடனே எழுந்திருக்கிறோம்.

கூடாதென்று வர்த்தமானப் பத்திரிகைகளில் வெளிப்படுத்தியு மிருந்தார். ஆயினு மென்ன? இவனுடைய தந்தை யிறந்தபின் அவருடைய சொத்துக்க ளெல்லாம் இவனுக்கே வருமென்று அறிந்த படியால் அவ்வூரில் அநேகர் அவனுக்குக் கடன் கொடுத்து வந்தார்கள். இவன் மிகவும் விலை பெற்ற நகைகளணிந்து கொண்டு வெகு ஒய்யாரமாக மாப்பிள்ளையைப்போல் கேட்பார் மேய்ப்பாரின்றி ஊர் ஊராகத் திரிந்து வந்தான்.

ஃ

இவன் பௌரிங்குப் பேட்டையிலேயே வசித்து வந்தபோதிலும் சில வருடங்களாக ஊரிலில்லை. கடனின் ஹிம்ஸை தாளாமல் வெளியூர்களில் ஸஞ்சரித்து விட்டு, அவ்வவ்விடங்களிலெல்லாம் பெரிய கடன் தொகைகளை வாங்கிக்கொண்டு மறைந்து, கடைசியாக அன்றுதான் இவ்வூருக்கு வந்தான். சபாபதி முதலியார் இறந்த செய்தியும், கண்ணப்பன் கமலவல்லியை மணந்துகொண்ட சங்கதியும், சாரதாவிலாஸம் விற்கப்பட்டுப்போனதும் இவனுக்குத் தெரியவே தெரியாது. இவற்றை யெல்லாம் வரும் வழியிலேயே கேட்டு வியப்புற்றவனுகிக் கமலவல்லியைக் காண்பதற்காக வந்தான். இவனைக் கண்ணப்பனுக்கும் நெடுநாளாகத் தெரியுமானதால், இவனைக் கண்ணப்பன் கண்டதும், "நீ இப்பொழுது எங்கே இருக்கிருய்? உன்னைப்பார்த்து நெடுநாளாயிற்றே" என்று க்ஷேமம் விசாரித்தான்.

பொன்னுசாமி:—நான் சில நாடகக் கம்பெனியாருடன் கூடிக்கொண்டு வெளியூர்களுக்கெல்லாம் போயிருந்தேன். சொந்தமாகவும் ஒரு நாடகக் கம்பெனி வைத்தேன். அதில் எனக்குக் கனத்த நஷ்ட முண்டாகி விட்டது. கையிலிருந்த பணமெல்லாம் தீர்ந்து எங்கும் கடனுகிவிடவே மறுபடியும் சொந்த ஊருக்குத் திரும்பி விட்டேன்.

கமலவல்லி:—உன் விஷயங்கள் முற்றிலும் விஷங்களாக இருக்கின்றன. அவற்றைக் கேட்கையில் எனக்குக் கோபமும் வருத்தமும் எழுகின்றது. நீ மிகவும் அயோக்கியனுய் விட்டாய். பணத்தின் அருமையை நீஇன்னும் உணரவேயில்லை. உன் தந்தையோ மிகவும் சிக்கனமாகப் பணத்தைப் பத்திரப் படுத்துகிருர். நீயோ காசைத் தூசாக மதித்து நாடகக் கம்பெனிகளிலுள்ள தாசி வேசிகளுக்கெல்லாம் செலவிடத் தலைப்பட்டாய். அதில் என்னவோ ஒரு பெருமை முளைக்கிறதென் றெண்ணி மதிமயங்கிப் பாழ்படுகிருய். நீ எந்தக் காலத்தில் சீர்திருந்துவயோ தெய்வமே அறியும். உனக்கு உன் தந்தை எவ்வளவோ புத்தி கூறியும் நீ கேட்பதில்லை. என் தந்தை உன்னைப்போன்ற உபயோக மற்றவன் நம் குடும்பத்தி லொருவருமில்லை யென்று கூறுவாரல்லவா? கெட்டது கெட்டாய்; போனது போகட்டும். இனியேனும் நல்வழியை நாடு. உனக்கு இனி பணம் எப்படிக் கிடைக்கும்?

பொன்னுசாமி:—பணமா? என் எனக்குக் கிடைக்காது? என் தந்தையிடம் சண்டையிட்டுப் பெற்றுக் கொள்கிறேன். அல்லது மார்வாடிகளிடம் கடன் வாங்குகிறேன். எவன் எனக்குக் கடன் தர மறுக்கிறவன்?

கமலவல்லி:—உன் பிதா தான் உயிருடன் உள்ளவரை நீஅவருடைய

---

பிரபலஸ்தர்களுடன் சில நிமிஷங்களே தான் பேச முடிகிறது. ஏனெனில் அவர்களுக்குள்ள வேலைகள் அனந்தம். அவர்களுடன் பேசப் பின்னல் காத்திருப்போரும் அநேகர்.

வீட்டு வாசல் வழி வரலாகாதென்று கட்டளை யிட்டிருக்கிறாரே? மேலும், உனக்கு எவருமே இனி பணம் தரலாகாதென்றும் பத்திரிகைகளில் பிரகடனப் படுத்தினான்றோ? உனக்கு எவர் கடன் கொடுத்துத் தம் தொகையை இழக்க மனமொப்புவார்? நீயோ வாங்கிய கடனைத் திருப்பித் தாராத சீமான்!

பொன்னுசாமி:—ஓ! அந்தக் கிழ மூதேவிக்குப் பைத்தியம் பிடித்து விட்டது. கண்டபடி அந்த நாய் குலைக்கிறது. அந்தப் பயல் இறந்த பின்பு அவனுடைய பணமெல்லாம் எனக்குச் சேரவேண்டியதுதானே? தனக்குப் பிறகு நான் எடுத்துக் கொள்ளக்கூடிய பணத்தை ஏன் இப்போதே கொடுக்கலாகாது?

கமலவல்லி:—பெற்ற பிதாவை இவ்வாறு தாழ்த்திக்கூறுதல் தகுதியா? பெரியோர்களைத் தாழ்த்திப் பேசுந்தோறும் உன் புத்தியை வெகு ஈன நிலைக்குக் கொண்டுபோய்விடுகிறாய்?—இன்னும் அதனால் நீ அடியோடு கெடுபவனாகிறாய்? என் தந்தைக்காக நான் தினமும் கண்ணீர் விடுகிறேன். தந்தையை உயிரோடு காணப் பாக்கியம் பெற்ற நீயோ அவரை இகழ்கின்றாய்? இகழ்வோன் இழிந்த நிலையே காண்பான். உன் தீய நடத்தை அவருக்குப் பிடிக்காததே உன்னை வெறுத்ததற்குக் காரணம்.

பொன்னுசாமி:—இன்று காலையில் என் தந்தையின் வீட்டிற்குச் சென்று அவரைக் கண்டேன். அவர் என்னுடன் எதும் பேசினாரில்லை. என்னைப் பாராமல் தலை குனிந்தபடியே இருந்தார். நான் அவரிடம் இது சமயம் எனக்கு இரண்டாயிரம் ரூபாய் அதிக அவசரமாக வேண்டியிருக்கிற தென்றும், அத்தொகையைக்கொண்டு பெருத்த வியாபாரம் செய்து கனத்த லாபம் சம்பாதிக்கப் போவதாகவும் கூறினேன். அவர் தனக்கு எந்த லாபமும் தேவையில்லை யென்றும், எனக்குக் கொடுத்துதவத் தன்னிடம் செம்பாலடித்த ஒரு காசு கூடக் கிடையாதென்றும், தான் பிராணனோடுள்ள வரையில் தான் இருக்குமிடத்திற்கு வரலாகாதென்றும், தன்னுடைய பிள்ளை யென்று நான் என்னை வெளியிற் கூறிக்கொண்டால் அது தனக்கு மிக்க அவமானமாக இருக்கிறதென்றும், நான் இனி அவ்வாறு எங்கும் சொல்லிக் கொள்ளாதிருக்கும்படியும் வெறியனைப்போல ஒரு மணி நேரம் வாயில் வந்தபடி யெல்லாம் பிதற்றி என்னை வெளியே துரத்திவிட்டார்.

கமலவல்லி:—இது உன் துர் நடத்தைக்குத் தகுந்த சிக்ஷைதான். இந்த அவமானத்தைக் கண்ட பின்னரேனும் நீ நல்வழிக்குத் திரும்பக் கூடாதா?

பொன்னுசாமி:—இது ஒரு அவமானமா? அவன் கெட்டான் கிழப் பயல்! ஆண்பிள்ளைகளுக்கு எந்தக் காலத்திலும் என்ன காரணத்தை முன்னிட்டும் அவமானம் என்பதே இல்லை. அவர்கள் எதுவும் செய்யலாம். எத்தனை தாசிகளையும் வைத்துக்கொள்ளலாம். ஒரு மனைவி இருக்கும்பொழுதே பல பெண்களை மணக்கலாம். வியபிசார தோஷம் பெண்களுக்கேயன்றி ஆண்களுக்கு இல்லை. ஆண்மக்கள் எத்தனை ஈனமாக நடந்தாலும் கையில் பணம் பெருத்திருந்தால் எல்லாம் மறைந்துவிடும். அந்தக் கிழவன் பணம் காக்கும் பூதமே தவிர, அதைத் தானும் அனுபவிக்கமாட்டான்; தான் உயிருடனுள்ளவரையில் பிறரை யனுபவிக்கவும் விடமாட்டான். (தொடரும்.)

S. G. R.

# சிறுமணித்திரள்



(6-ம் வால்யம் 771-ம் பக்கத் தொடர்ச்சி.)

957. இறைவனிடத்து அன்பு காட்ட வேண்டுமானால், மன்னுயிரனைத்திடத்தும் நாம் அன்பு செலுத்த வேண்டும்.

958. நாம் எவ்வளவுக் கெவ்வளவு அன்பையும் இரக்கத்தையும் மன்னுயிரிடத்துக் காட்டுகிறோமோ அவ்வளவுக் கவ்வளவு கடவுளும் நம்மிடம் அன்பையும் அருளையும் காட்டுவார்.

959. மக்கள் இயற்றப்புகுந் தொழின்முறை எதுவாயினுமாகுக. அதன்கண் நீதி நிகழ்தல் வேண்டும்.

960. வாழ்விலுந் தொழின் முறைகளிலும் நீதி நெறி பிழைநின்று, நீதிக்கு வேறாகக் கடவுளிருப்பதாகக் கொண்டு, நீதியினின்றுங் கடவுளைப் பிரித்துக் கடவுளை வழிபடுவது கடவுளுக்குரிய வழிபாடாகாது.

961. அரிதை எளிதாக்கலும், எளிதை அரிதாக்கலும் மக்கள் முயற்சியைப் பொருத்து நிற்பன.

962. இளமை தொட்டே தன்னலத்தைக் கடிந்து வாழ்வோனுக்கு நீதிநெறி நிற்றல் எளிதாகும்.

963. தன்னலமே நீதியை மறக்கச் செய்வது. அத்தன்னலப் பேயையோட்டினால், நீதிக்கடவுள் ஆங்கு எழுந்தருளல் உறுதி.

964. தன்னலந் தேயத்தேய, நீதி வளர்ந்து வளர்ந்து அஃதொருபோது தனது முழு நிலையையும் எய்தும். அந்நிலையே கடவுள் நிலையாகும்.

965. நமது ஆசைகள் இருவகைப் பட்டனவாகும். (1) சுயநலங் கருதிய ஆசைகள். (2) பிறர் நலம் கருதும் ஆசைகள்.

966. தன்னலம் நாடாத ஒருவன் பிறர் நலம் நாடி உழைப்பதையே தனக்குரிய தொண்டாகக் கொண்டு வாழ்வு நடத்துவானாதலின், அநீதியிலிறங்குஞ் செய்கை அவனுக்கு நேராதென்க.

967. இக்காலத்தில் உலகமெங்கும் வெளிவேஷம் அதிகமாகிவிட்டது. மனிதர்கள், எம்மதத்தினராயினும் சரி, தத்தம் சமயங்களின் வெளிப்படையான சடங்குகளைப் பற்றிக் கவலை கொள்ளுகிறார்களே தவிர, தங்கள் உண்மைக் கடமைகளை முற்றிலும் மறந்து விடுகிறார்கள்.

968. பணத்தினிடம் நமக்குள்ள பேராசையினால் பிறருக்கு எவ்வளவு துன்பம் விளைகின்றது என்பதைப் பற்றியாவது, விளையக்கூடும் என்பதைக் குறித்தாவது சிறிதும் சிந்திப்பதில்லை.

969. நெறி துறந்து ஒழுகும் மாந்தர் இம்மையிலும் சரி, மறுமையிலும் சரி, தமக்கேனும் பிறர்க்கேனும் யாதொரு நன்மையும் செய்துகொள்வதில்லை.

970. உலகத்திலுள்ள சாமான்ய சாஸ்திரங்களெல்லாம் உலகின்

நிலையை உள்ளபடியே எடுத்தோது கின்றன. நீதி சாஸ்திரமோவெனில், உலகம் எப்படி இருக்கவேண்டுமென் பதுபற்றிக் கூறுகிறது.

971. தன் சரீரம், மனம், அறிவு ஆகிய இம்மூன்றினையும் தனித் தனியே நன்கு ஆராய்தல் மனித னுடைய கடமையாகும்.

972. அநீதி, அக்கிரமம், ஆணவம் முதலியவைகளின் முடிவு யாதென் பதை ஒவ்வொருவனும் பிறரைப் பார்த்து அறிதல்வேண்டும்.

973. நீதி நெறியில் நடக்கும் ஒருவனுக்கு வாழ்க்கையில் வெற்றி கிட்டாவிடின், அது நீதி நெறியின் தோஷமன்று; நீதி நெறிக்கு மாருக நடக்கும் மற்றவர் குற்றமேயாகும்.

974. உழைப்பு, கல்வி, வெளிப் பரிசுத்தம் முதலிய குணங்களும் தம் மளவிலே சன்மார்க்கமாக மாட்டா. ஆனல் இவையெல்லாம் சன்மார்க்க வாழ்வின் அம்சங்கள்தான்.

975. பிரதிபலனை உத்தேசித்து நல்வினைகள் செய்தல் உண்மைச் சன் மார்க்கமாக மாட்டாது. சன்மார்க்கத் துக்குச் சன்மார்க்கமே வெகுமதி யாகும்.

976. நாம் நமது உள்ளத்தின் ஆசைகளை ஆராய்ந்து பார்ப்பின் நம் மிடமுள்ள பொருள்களை நாம் அதிகம் மதிப்பதில்லை யென்பதும், நம்மிடம் இல்லாதனவற்றையே அதிகமாக விரும்புகிறே மென்பதும் தெரிய வரும்.

977. சுயநல ஆசைகளைப் பூர்த்தி செய்வதற்கான முயற்சிகள் சன்மார்க் கமாக மாட்டா. பிறருக்கு நன்மை செய்யவேண்டுமென்னும் நோக்கத்து டன், தான் நல்ல நிலைமையையடைய விரும்புவதே சன்மார்க்கம்.

P. G. குலசேகரன்,
"மனோரஞ்சினி" விலாஸ்.



## மனம் மாறிவிடுந் தன்மை.

ஒருசமயத்தில் ஒருவனுக்குத் தாராளமாய்ப் பணம் காசு கொடுக்கப் புத்திபோகிறது. அவனுக்கு இராஜோப சாரம் செய்யவைக்கிறது. பிறகு மற்றொருசமயமோ மனம் மாறிவிடுகிறது. ஏன் அவனுக்கு உதவி செய்யவேண்டு மென்று யோசிக்கச் செய்துவிடுகிறது. கையும் சுருங்கு கிறது. முன்பு தந்ததைக்கூடக் கைப்பற்றிக்கொள்ளப் புத்தி போகிறது. எவ்வித உபகாரமும் செய்யாமலே ஒதுங் கிக்கொண்டு அன்னியனுயிருந்துவிடும்படி தூண்டுகிறது. ஆகவே, ஒருவனுக்கு முன்பு ஒருசமயம் நல்லமனம் இருந்த தென்று கொண்டு எப்போதும் அப்படியே நடப்பான் என்று தீர்மானித்துவிடுவது கூடாது.

அதிகமாக ஒருவனைப் புண்படுத்தி விடுவதில் அவன் மனம் கசந்து மாறி முற்றிலும் அன்னியனுகி விடுகிறான்.

# விபசாரத்தின் பயங்கரம்.

(6-ம் வால்யம் 786-ம் பக்கத் தொடர்ச்சி.)



மகளீர் கலவியினும் மன்னுயிர்க்கு இன்பம் தரும் பொருள் இவ்வுலகினில் மற்றொன்றுண்டா? அதன் அளப்பரிய சுவையின் பெருக்கு பேசவுங் கூடுமோ? சிருஷ்டி சவுக்கியங்களெல்லாவற்றிலும் மேன்மையான சவுக்கியமன்றோ இது? இஃது எல்லாப் பிராணிகட்கும் பொதுவானது. எக்காலமும் நாசம் பெறாது சிருஷ்டி நீடூழி நிலைத்திருப்பதற்கு இதுவே யாதாரம். ஆதலினால், இதனில்எல்லாம்வல்லகடவுள் அத்தியந்த அதிகமான ஆநந்தத்தை ஏற்றி யிருக்கின்றார். விவாக தம்பதிகளுக்குக் கலவிச் சமயத்தில் அவ்விருவரின் சரீரங்களி லுண்டாகும் புளகமும், காம வெப்பமும் ஒருவருக்கொருவர் பாய்ந்து அபரிமிதமான ஆநந்தத்தையும் சௌக்கியத்தையும் பிறப்பிக்கும். தழுவல் முத்தமிடல் முதலிய தொழில்களிற் கூடக் காமவெப்பமும் சௌக்கியமும் அதிகப்படும். ஆண்மகனின் தேகத்தினின்றும் செலவிடப்பட்ட இந்திரியத்திற்குப் பதிலாக மற்றோர் அமிர்தம் பெண்மணியின் தேகத்தினின்றும் ஊறிச்சுரந்து ஆடவனின் சரீரத்திற்குள் உறிஞ்சப்பெற்றுச் சேர்க்கப்படும். இதனால் ஆடவன் தான் இழந்த சொத்துக்குப் பதில் சொத்தைப் பெண்மணியினிடமிருந்து பெற்றுக் களைப்பினின்றும் தேறி முன்னினும் பதின்மடங்கு பலவானாகின்றான். கலவியின் மகிழ்வால் ஸதிபதிகளின் மனோவிகாரம் தீர்ந்து பரிசுத்தர்களாகின்றனர். அவர்களினிடையே நிகழும் எத்தகைய பிணக்கும் வருத்தங்களும் பிரிவும் கலவியாவலால் ஸமரச மடைந்து இருவருக்குள்ளும் அன்னியோன்னியம் பெருகுகின்றன. தெய்வீக காதலுக்குங் கலவியன்றோ பிராணாதாரம்? கலவியின்றேல் காதல்ஞாலம் ஏது? கலவி எத்துணையோ பிணிகளைத் தீர்க்கும் பரம ஸஞ்சீவி. விவாகத்திற்கு முன்னம் பல உடற்பிணிகளாலும், மனோ விகாரத்தாலும் பாதிக்கப்பட்டிருந்த ஆடவர் மகளீரிற் பல்லோர் கலவிச்சுக ஔஷதத்தைக் கையாடியபின் குணப்பட்டு நன்னிலையை யடைந்திருக்கிறார்கள். கலவியினுள் மூழ்கி, அதன் இன்பக் கரைகண்டு, சின்னீராய், சிற்றளவாய், நொடிப் பொழுதினில் மறைந்தொழியுந்தன்மையதாயுள்ள அதன் மாயம் நோக்கி, சீ! இது சிற்றின்பமேயெனத்தேர்ந்து, இதனினும் பெரிதாய பேரின்ப மொன்று உண்டேல் அது எது என ஆராய்ந்து, அவ்வழியில் முக்தி யின்பமே முதற்றா இன்பமென ஓர்ந்து அதனைப் பெறுதற்கு நாடி, அதற்காய பக்குவ நலத்திற்கு முயற்சி மிகுந்து, அவ்வழியே இறைவனை யடைதற் கென்றே இச்சிற்றின்

ஒருவன் ஊரில் இல்லாதபோது அவனது அனுகூல சத்துருக்களுக்கு அதிக சந்தோஷமாகி விடுகிறது. தங்கள் அக்கிரமத்தைக் கடவுள் பார்க்கிறார் என்பதையும் மறந்து விடுகிறார்கள்.

பத்தினைக் கருணாசாகரரான கடவுள் நமக்கு அருளியுள்ளார். அதனைக்கிரம வழியிற்கொண்டு இன்பந் துய்த்து மக்கட் பேற்றினை யெய்தி குடும்பவிர்த்தி செய்து மருமகன்—மருமகளைப்பெற்றுத் தந்தை மாமன், பாட்டன் என்ற உயரிய பதவிகளை யேற்று மாண்புறுதவன்றோ மேன்மை? இவ்வுத்தம வழியிற் செல்லின் ஒருபிணியும் கிடையாதே. எத்துணையோ மகிழ்ச்சியுடனும் பூரிப்புடனும் வாழ்நாள் சிறந்து விளங்குமே. இதனை விட்டு விபசார வழி புகுந்து, பிறமாதரை நாடி, பிணிகண்டு வாடி, ஆவி சோர்வார்தம் மடமை என்னே! என்னே!! கிரமம் என்பது இயற்கை; அக்கிரமம் என்பது செயற்கை. அக்கிரமத்திற் புகுவாருக்கு அய்யனின் தண்டனை இல்லா தொழியுமோ? ஐயோ! ஐயோ! என்று அலறவே வைக்கும். படாத பாடு படவே நேரும்.

(தொடரும்.)



## பசியோடு அனுப்பிவிடேல்!

வெளியூர்வாசியான ஒருவர் மிக்க பசியுடன் தன் உறவினரின் வீட்டுக்கு இராவிற் சென்றார். அவ்வீட்டிலிருந்தவர் இப்போதே புசிக்கிறீர்களா?—பிறகு புசிக்கிறீர்களா என்றார். வெளியூர்வாசி இப்பொழுதே புசிக்கிறேனென்றார். சிறிதுநேரம் கழித்து, அப்பால் புசிக்கிறீர்களா என்று அவ்வீட்டினர் வினவினர். இவரும் அப்படியே என்றார். சிலநிமிஷங்கள் கழிந்தன. மறுபடியும் வீட்டுக்காரர் தான் தன் மனைவியோடும் விவாகத்திற்குச் சென்று வருகிறேன்; இங்கேயே இருக்கிறீர்களா என்றார். அதற்கும் வெளியூரார் அப்படியே என்றார். பிறகு மீண்டும் வீட்டுக்காரர் நீங்கள் எங்காவது சென்றுவிட்டு ஒன்பது மணிக்கு வாருங்கள் என்றார். வெளியூரார் தம் பசியுடனே வெளியேறினர். பிறகு வரவில்லை. பிறகு வீட்டுக்காரரும் உடையணிந்து வெளியிற் சென்றுவிட்டார். பசியுடன் வந்தவர்க்கு இவ்வளவு சாதம்போட்டு அனுப்பியிருந்தால் எவ்வளவோ நன்றாயிருக்குமே. வீட்டுக்கு வந்தவரைப் பசியுடன் அனுப்புவது பாவமன்றோ? ஏனோ இவ்வாறு செய்வது?

சிலர் தாங்கள்ஒரு வேலையைத்தொட்ட ஆரம்ப முதற்கொண்டே தலைமை ஸ்தானத்திலிருந்து பிறருக்குப் புத்தியோசனைகள் சொல்லத் தகுந்தோராய்த் தங்களின் காரியங்களையும் விவகார ஒழுங்கின்படி நிர்வகிப்போராய் இருக்கிறார்கள். வேறு சிலரோ எத்தனை வருடங்களாயினும் பிறரிடம் புத்திமதிகள் கேட்டுக்கொள்ள வேண்டியவர்களாகவே ஒருபடியில் தாழ்ந்து கிடக்கிறார்கள். இது பிறவியின் அமைப்போ யாதோ!

# மனோபலத்தின் மகிமைகள்.

(6-ம் வால்யம் 646-பக்கத் தொடர்ச்சி.)



"மெஸ்மரிஸம்" எல்லாவற்றிற்கும் அதைச் செய்பவனது மனோபலமும் அவன் உண்டாக்கும் அச்சமும் காரணங்களாய்த் தோன்றுகின்றன. கோழிக்குஞ்சு, ஊர்க்குருவி முதலிய பட்சிகளைக் கையிற் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு, அவற்றின் கண்களுள் விழி புரட்டாமல் சொற்ப நேரம் பார்த்துக் கைவிரல்களுடன் மந்திரிப்பதுபோலச் சிலதடவைகள் தலைமேல் தடவிக்கொடுத்துப் பிற்பாடு ஒரு மேஜைமேல் வைத்தால், அவை சாதாரணமாய் அசையாமல் விழுந்துகிடக்கும். பூனைகள், நாய்கள், பசுக்கள், எருதுகள், குதிரைகள் முதலிய ஜெந்துக்களைக்கூட மெஸ்மரித்து வசப்படுத்திக்கொள்கின்றனர். மனுஷ்யர்களைக் காட்டிலும் பட்சிகளையும் மிருகங்களையும் மெஸ்மரிப்பது சுலபமாக இருக்கும்.

எவ்வளவு கொழுத்தகுதிரையானாலும் இதனடியில் விளக்கிய வழிப்படி மெஸ்மரித்து இரண்டு மூன்று மணி நேரத்துக்குள் வசப்படுத்திக்கொள்ளலாமென்று கிரந்தங்களில் கூறப்பட்டிருக்கிறது. அதிகமாகிய தைரியத்துடன் மனத்தைப் பலப்படுத்திக்கொண்டுகுதிரையண்டை சாக்கிரதையாய்ப் போய் அதன் மூக்குத் துவாரங்களில் விரல்களை விட்டுக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு, மற்றக் கையுடன் காதைப்பிடித்துக்கொண்டு தலையைக் குனித்துச் செவியில் கெட்டியாய் ஊதவேண்டும். ஒருவேளை இப்படிச் செய்வதற்கு அனுகூலப்படாதபட்சத்தில் ரப்பர் குழலொன்று செவியில் நுழைத்து ஊதவேண்டும். இப்படி 4-5-நிமிஷங்கள் ஊதிய வேளைக்குக் குதிரை கடகடவென்று நடுங்கத் துவங்கும். பிற்பாடு அவ்வண்ணமாகவே, மூக்கைப்பிடித்துக் கொண்டிருந்து இரண்டாங்கையுடன் கழுத்துப் பக்கங்களைத் தட்டி, கழுத்தினின்று வாலோக்கி மெதுவாய்த் தடவவேண்டும். பிறகு அதன் கண்கள் பக்கமாயும் முகப்பக்கமாயும் சற்று நேரம் விழியூன்றிப் பார்த்து, முகத்தின்மீது மந்திரித்ததுபோல் விரல்களுடன் கீழுக்குத் தடவிக்கொடுத்து விசிறவேண்டும். இப்படி விடாப்பிடியாய் இரண்டு மூன்றுமணிநேரம் செய்த பிறகு குதிரையை விட்டுவிட்டு, வரும்படிக் கூப்பிட்டமாத்திரத்திலேயே அது தன்னிச்சையாய்ப் பின்னே வரும். எவ்விடத்துச்குப் போயினும் அவ்விடத்துக்குப் பின்தொடர்ந்து, எப்படித் திரும்பிய போதிலும் அப்படித் திரும்பும். நாலைந்து தினங்கள் இவ்வாறு வழக்கப்படுத்தினால் குதிரை செவ்வையாய்ச் சாதுவாய்ப்போகும். எருதுகளையும் பசுக்களையுங்கூட இவ்வண்ணமாகவே சாதுவாக்கி வசப்படுத்திக் கொள்கின்றனர்.

ஃ

---

சமாதான வீட்டில் ஒரு கலகமூட்டிப் புகையச்செய்வது வெந்துபோன உருளைக்கிழங்கின் தோலை உரிப்பது எவ்வளவு சுலபமானதோ அவ்வளவு சுலபமானதே எனக்கு என்றாள் ஒரு பாவை.

யானைகள், புலிகள், சிங்கங்கள் முதலிய துஷ்ட ஜெந்துக்களையும் மெஸ்மரித்து சில வனஸஞ்சாரிகள் அதிசுலபமாய் வசப்படுத்திக்கொள்வர். புலிகளையும் சிங்கங்களையுங்கூட மெஸ்மரித்துச் சாதுவாக்கிக் கொணர்ந்து சர்க்கஸ்ஸுகளில் ஆட்டுகிறார்கள். இப்படி ஆட்டும்பொழுது அவற்றைப் பயப்படுத்துவதற்காக எரிந்துகொண்டிருக்கும் கொள்ளிகளையும் துணிகளையும் அவர்கள் கூட்டுக்குள் கொண்டு போகிறார்கள். ஸர்ப்பங்களைக்கூடத் தைரியத்துடன் சிலர் சடிதியில் பிடித்துக்கொள்வார்களென்று தெரிய வருகிறது. இவை யெல்லாவற்றிற்கும் மனோபல தைரியங்களும், அவற்றினால் அச்செந்துக்களுக்கு உண்டாகும் அச்சமும் காரணங்களென்று அறிந்துகொள்ளவேண்டியது. இம்மனோபல தைரியங்களில் எவ்வளவு குறைவு காணப்பட்டபோதிலும், அச்செந்துக்கள் க்ஷணமே அக்குறைவையறிந்துகொண்டு, எதிர்த்துத் தீங்கு செய்வது நிச்சயம். மெஸ்மரிப்பவரிடம் உண்மையாகவே ஒரு வசீகர சக்தியுண்டு. அந்த சக்தி எவரையும் எந்த செந்துக்களையும் வசியப்படுத்திவிடுகின்றது. சில ஆடவர்கட்கும் பெண்கட்கும் இந்த வசீகரசக்தி இயற்கையிலேயே அமைந்து நிற்பதில் பெரும்பாரியான குடும்பங்களையும் சமாதானமாய் அடக்கியாண்டுத் தலைமை வகிக்கிறார்கள். அவர்களின் காலத்திற்குப் பிறகோ அவ்விதம் அடக்கியாள எவராலும் முடிவதில்லை.

---

## பிடிகொடுக்கும் அம்சம்.

ஒரு முக்கியமான பேச்சில் சிலர் பிடிகொடுத்துப் பேசுவதில்லை. அதையே மறுபடியும் வற்புறுத்திக் கேட்பின், மெதுவாக அந்த சங்கதியை நழுவவிட்டு வேறு வார்த்தையை ஆரம்பித்துக்கொள்கிறார்கள். அந்த வார்த்தை பேசிமுடியும்வரையில் காத்திருந்து அது முடிந்தபின் மறுபடியும் அந்த முக்கிய விஷயத்தை ஞாபகப்படுத்திக் கேட்கப்புகின் அதற்குப் பதில் தராமலே மற்றொரு கதையைத் தொடங்கிவிடுகிறார்கள். இதில் என்னவோ தாங்கள் மஹா சமர்த்து காட்டிவிட்டதாக அவர்கள் நினைத்துக்கொள்கிறார்களே தவிர, அவர்களின் மனப்போக்கை இதனால் மற்றவர்கள் அளந்து அறிந்துகொண்டுவிடுகிறார்களென்பதை நினைத்துப் பார்ப்பதேயில்லை. கடைசியில் இவர்களின் கபட மனமும் வெளியில் தெரிந்து நாறுகின்றது. கசப்பும் முதிர்கின்றது அதிக தந்திரம் தரித்திரமே

வெட்டொன்று துண்டிரண்டெனப் பேசுவதில் பரஸ்பரம் இரு ஹிருதயங்களிலும் மர்மமாய் மறைக்கப்பட்டிருந்த திரை கிழிந்து உள்ளுக்கு இருக்கும் பசையற்ற தன்மை வெளிப்பட்டுவிடுகிறது. அன்பும் பறக்கிறது.

# குடும்ப விநோதக் குறள்.

## 7. பகைமைக் குணம்.

1. வாய்மையும் நேர்மையும் வாட மகிழ்ச்சியைத்
தேய்க்கும் பகைமையெனத் தேர்.

2. உண்மை நிலை காணவலை உள்ளறிவை யோட்டிமனத்
திண்மை குலைக்குமெனச் செப்பு.

3. நல்லதென்றுந் தீயதென்றும் நாடாது தாங்கொண்ட
பொல்லாப் பகைகக்கு வார்.

4. நாகமெனச் சீறிடுவார் நாய்போல் குலைத்திடுவார்
வேகு நெஞ்சில் வேதனையே தான்.

5. களங்கமிலா நெஞ்சு களிக்கையில் தாமெரிவார்
களங்கப் பகைமனத்தால் காண்.

6. ஆராயும் புத்தி அமைதி நடுநிலைமை
சீர்யாவும் சென்றுவிடு மே.

7. இவ்வுலகும் எப்பொருளும் இவ்விரண்டு மல்லாத
எவ்வகையு மிக்கவெறுப் பே.

8. இறைவனின் இவ்வுலகம் இன்பமெனத் தேரின்
குறையும் பகைமையெனக் கூறு.

9. அனைத்துயிரும் ஆண்டவனின் இன்குழவி யென்றால்
முனைக்கும் பகைமையெதற் கோ?

10. பகைமையே கொண்டொழுகும் பாவியிடம் அன்பின்
வகைதானு முண்டாகு மா?

T. S. குழந்தைவேல் முதலியார்.

---

*சிலர் ஒருவனை அக்கிரமமாக நடக்கிறானென்று சொல்லுகிறார்கள். ஆனால், அந்த ஒருவன் நடப்பதைக்கூர்ந்து கவனிப்போமானால் அவனிடம் நற்செய்கைகளின் பதிவுதான் முழுதும் இருக்கிறதேயன்றி துர்ச்செய்கைகளின் பதிவு இரண்டொன்றுகூட இருக்கக்காண்பதும் அரிதென்றே ஏற்படுகின்றது. அப்படி ஏற்பட்ட துர்ச்செய்கைகளின் பதிவும், அதற்குரிய முகாந்தரங்களைப் பரிசோதனைசெய்து பார்க்கப்படுமிடத்து துர்ச்செய்கைகளெனக் கருதப்படத் தகாதவைகளென ஏற்படுவதும் நிச்சயமே. சற்றும் இரக்கமற்றுத் தன்னையும் தன் மனைவியையும் மிக்க கொடூரமாய் வாதனைப்படுத்தும் தாயிடமிருந்தும் பிரிந்து விலகுதல் துர்ச்செய்கையாமா? ஏராளமான நற்செய்கைகளின் பதிவு இரண்டொரு தீச்செயல்களின் பதிவுகளை இருந்தவிடம் தெரியாது மறைத்தோ, அல்லது முற்றும் அகற்றியோ பரிசுத்தமாய்ச் செய்துவிடவும் கூடும்.*

# “ அமிர்த குணபோதினி ”

## ஆங்கீரஸ வருஷத்திய சித்திரை மாத பஞ்சாங்கம்.

| யோகம் | இங் | தமிழ் | வார | திதி, நக்ஷத்திரம், விரதாதிகள் முதலியவை. |
|---|---|---|---|---|
| சி | 13 | 1 | புதன் | ஸப்-36-21, ஆரு-14-3, விஷுவத், தமிழ் வருஷப் பிறப்பு, ஸமார்க்கம். |
| அ | 14 | 2 | வியா | அஷ்-36-28, புந-16-22 ஸ்ரீமுஷ்ணம் கருடன் |
| உ-ம | 15 | 3 | வெள் | நவ-34-45, பூச-16-57, ஸ்ரீராமநவமி. |
| ம-அ | 16 | 4 | சனி | தச-31-12, ஆயி-15-44 |
| ம-சி | 17 | ஏப்ரீல் (4-10) 5 | ஞா | ஏகா-25-51, மக-12-44, ஏகாதசி. |
| சி | 18 | 6 | திங் | துவா-19-2, பூர-8-11, திதிதுவயம் கரிநாள். |
| அ-சி | 19 | 7 | செவ் | திர-11-0, உத்-2-17, ஹஸ்-55-50, கஞ்சி வரதர் திருநக்ஷத்திரம், சதுர்தசிதிதி. |
| சி | 20 | 8 | புதன் | சதி-2-3, ○ 52-31, சித்-47-52, சித்திரா பூர்ணிமை, சித்திரகுப்தர் விவாஹம், ரிஷபாயனம்-17-27. |
| அ-சி | 21 | 9 | வியா | பிர-42-56, ஸ்வா-40-22. |
| சி | 22 | 10 | வெள் | துவி-33-48, விசா-33-13, திருவல்லிக்கேணி கருடன் |
| சி | 23 | 11 | சனி | திரி-25-29, அநு-26-52, திரிதியா திதி. |
| ம-அ | 24 | 12 | ஞா | சது-18-19, கேட்-21-21, திதிதுவயம். |
| சி-உ | 25 | 13 | திங் | பஞ்-12-43, மூல-18-13, ஷஷ்டிதிதி. |
| சி-பி | 26 | 14 | செவ் | ஷஷ்-8-57, பூரா-16-34, திருநீர்மலை ரதம். |
| அ-சி | 27 | 15 | புதன் | ஸப்-7-17, உரா-16-57, கரிநாள். |
| சி | 28 | 16 | வியா | அஷ்-7-34, ஶ்ரவ-19-4 |
| சி | 29 | 17 | வெள் | நவ-9-20, அவி-23-6 |
| அ-ம | 30 | 18 | சனி | தச-14-4, சத-29-19, ஏகாதசிதிதி. |
| சி-அ | 1 | 19 | ஞா | ஏகா-19-19, பூட்-36-12, அதிதி. |
| சி | 2 | 20 | திங் | துவா-25-27, உட்-43-45, துவாதசிதிதி. |
| சி | 3 | 21 | செவ் | திர-31-55, ரே-51-32, பிரதோஷம் சிவராத்திரி. |
| ம-சி | 4 | 22 | புதன் | சதி-38-21, அசு-59-21, ஸ்ரீமுஷ்ணம் வராஹஜயந்தி. |
| சி | 5 | 23 | வியா | ● 44-34, பர-60-0, அமாவாசை, |
| சி | மேயீ 6 | 24 | வெள் | பிர-50-17, பர-6-45, கிருத்திகை. |
| அ | 7 | 25 | சனி | துவி-55-22, கிரு-13-37. |
| சி | 8 | 26 | ஞா | திரி-59-38, ரோ-19-47, மோஹரமீ 1உ |
| அ-சி | 9 | 27 | திங் | சது-60-0, மிரு-25-7. |
| ம-சி | 10 | 28 | செவ் | சது-2-52, ஆரு-29-29, ஸ்ரீசங்கரஜயந்தி. |
| சி | 11 | 29 | புதன் | பஞ்-4-59, புந-32-32. |
| அ-சி | 12 | 30 | வியா | ஷஷ்-5-47, பூச-34-28, சிங்கபெருமாள் கோயில் கருடன், அப்பர்காக்ஷி. |
| ம | 13 | 31 | வெள் | ஸப்-5-11, ஆயி-34-53, ரிஷபாவி-44-8, விஷ்ணுபதி, சூன்யர்க்கம். |

| | | | |
|---|---|---|---|
| அ-பு ரா | சூ | சுக் | |
| | 15உக்கு ராசி | | குரு |
| சனி | | | |
| | | | கே |

“ அமிர்த குணபோதினி ” பிரஸ், 302, தங்கசாலை வீதி, சென்னை—1932.